# 103

# வேரோட்டம்

***லலிதா***

இன்றும் அவர் உலவப்போகும் பக்கமே நானும் போகப்போகிறேன். என்னதான் செய்கிறார் பார்க்கிறேன். ஆனால், மூன்று நாட்களாகத்தான் வேண்டுமென்றே நான் அந்தப் பக்கம் போகிறேன்–ஒரு வார்த்தை!

இந்த மாதிரியும் ஒரு பிறவி உண்டோ என்று எனக்கு ஆச்சரிய மாக இருக்கிறது. முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டல்லவா போகிறார்! சங்கோசமா, பயமா, வெறுப்பா, அல்லது என்ன காரணம்?

காலேஜில் எவ்வளவு வாலிபர்கள் இருக்கிறார்கள்! ஒருவராவது இவர் மாதிரி இல்லை. இவர் போக்கே தனியாக இருக்கிறதே! மற்ற மாணவர்கள் பெண்களை என்ன பாடுபடுத்துகிறார்கள்!... வாலிபத்திற்கு இயற்கைதானே! சொல்லப்போனால் அது அவ்வளவும் எங்களுக்கு வேண்டித்தான் இருக்கிறது.

இவர் மட்டும் இப்படி எங்களை அலட்சியம் செய்தால் ஆத்திரம் வராதா? உண்மையை ஏன் ஒளிக்க வேண்டும்? என்னை இவர் அலட்சியம் செய்வது: நான் சும்மா இருப்பதா?

ஆனால், இவர் லட்சியம் செய்யவில்லை–அதாவது மற்ற மாணவர் களுடன் சேர்ந்து என்னைப் பற்றிப் பேசவில்லை என்று எனக்கேன் இவ்வளவு ஆத்திரம்? எனக்கே தெரியவில்லை... 'உன்னைப் பற்றித் தானடி எல்லாப் பையன்களும் பேசுகிறார்கள்!' என்று சுலோசனா சொன்னாள் அன்று. அவர்கள் பார்க்கும் பார்வைகளுக்கு நான் கொஞ்சம் இடம் கொடுத்திருந்தால்... மீனாட்சி கதிதான்! அவளை என்ன கேலிக் கூத்து செய்கிறார்கள். காகிதங்கள் சுருட்டி எறிவதும், 'மீனா' என்று கும்பலிலிருந்து ஆள் தெரியாமல் கூப்பிடுவதும் – என்ன ரகளை! எல்லாம் அவள் பிசகு – சுத்த அசடு!

இவர் நடந்து கொள்ளும் முறை என்னை அவமதிப்பது போல் இருக்கிறது. மற்ற பெண்கள் கிடக்கட்டும்!

அப்படி கட்டுப் பெட்டியாகவும் தெரியவில்லையே! நடை, உடை, பாவனைகள் எல்லாம் புதுமோஸ்தர், காலேஜ் கூட்டங்களிலோ

பிரமிக்கும்படி பேசுகிறார். மற்ற மாணவர்களுடன் பேசும்பொழுது பார்க்கவேண்டுமே—அப்பொழுது காணோம் இந்த விந்தை!

மூன்று நாட்களாக முரட்டுத்தனமாக ஏதோ செல்கிறேன்—ஏன் செல்கிறேன் என்று யோசிக்கிறேன்; தெரியவில்லை. இவர் மதித்து என்ன ஆகவேண்டும்? இவர் பார்த்து ஏங்குவதால் என் அழகு ஏதாவது அதிகரிக்கப் போகிறதா?

பெண்களைக் காணவே இவருக்குப் பிடிக்காதோ? கலியாணமாகி இருக்கிறதோ என்னவோ தெரியவில்லை....ஆ!... இவர் பார்ப்பதற்கு நன்றாக இருக்கிறார். புத்திசாலி – இவர் என்னை – நான் ஒருத்தி இருக்கிறேன் என்று கூட உணராமல் இருக்க விடுவதா?

நேற்று மேரி கலாசாலைக்கு எதிரே கண்டேன். தூரத்திலிருந்தே அவர் முகத்தைக் கவனித்தேன். நான் அவரைப் பார்ப்பதற்கு முன்னால் அவர் என்னைப் பார்த்துவிட்டார் போலிருக்கிறது. பிறகு, அவரை நான் தாண்டும்வரை அவர் பார்வை சமுத்திரக் கரைப் பக்கமிருந்து திரும்பவே இல்லை! சற்று தூரம் சென்று, திரும்பிப் பார்க்கிறாரா என்று நின்று திரும்பிப் பார்த்தேன்—பார்க்கவில்லை! இந்த மாதிரி ஒரு ஆண் பிள்ளை உண்டா?

'உனக்கென்ன பேராசை? காலேஜ் முழுவதும் உன்னைக்கண்டு ஏங்குகிறது – போதாதாக்கும்? இவர் ஒருவர் பராமுகமாய் இருந்தால் என்ன? அவரையும் மயக்காவிட்டால் உனக்குச் சாதம் இறங்காதாக்கும்?' என்றாள் சுலோசனா. ஒன்றும் தெரியாமல் பேசுகிறாள் என்று நான் அவளுக்கு பதிலே சொல்லவில்லை.

காலேஜ் ஏங்கினால் என்ன, உலகமே ஏங்கினால் என்ன? அவர் ஒருவர் கண்களைக் கவராதவரை எனக்குச் சாதம் இறங்காதுதான்! பெண்ணாயிருந்தும் அவளுக்கு இன்னும் பெண் உள்ளத்தின் ரகசியம் அனுபவப்படவில்லை.

அவர் என்னைப் பார்த்துப் புன்னகை செய்து மதிமயங்கி நின்றால், அப்பொழுது ஒருவேளை அவரையும் மற்றவர்கள் ஜாபிதாவில் சேர்ப்பேன். இப்பொழுது, அவர் தனிமனிதன்; என் உள்ளமும் வனப்பும் பொங்கி எழுந்து ஆக்கிரமிக்க விருப்பும் எதிரி! அவரை வென்றால் தான் என் உள்ளம் நிம்மதி பெறும். வென்ற பிறகு – ஒருவேளை அவருக்கே அடிமையாகுமோ – ஆகலாம், ஆகட்டும், பாதகமில்லை,– ஏன் அதுதான்...

**சந்திரசேகரன்**

லலிதா இப்பொழுது வேண்டுமென்றேதான் தினமும் பீச்சில் எனக்கு எதிர்ப்படுகிறாள் என்று தெரிகிறது. எதற்காக இப்படி திடீரென்று ஆரம்பித்திருக்கிறாள்?

என் அருகில் வரும்பொழுது வேண்டுமென்றே மெதுவாக நடந்து என் முகத்தைக் கவனித்தாள். நான் ஒதுங்கி வேறு பக்கம் பார்த்துக் கொண்டு போனேன்.

லலிதா மற்ற பெண்களைப்போல, சிலரைப்போல, துடுக்காகவும் துணிச்சலாகவும் நடந்து கொள்பவளல்ல; அழகுடன் நல்ல நிதான புத்தியும் கம்பீரமும் உடையவள் ஆயிற்றே! அதனால்தானே பசங்கள்கூட அவளிடம் வாலாட்டுவதில்லை; வெகு மரியாதையாக இருக்கிறார்கள்.

அன்றே சுந்தரம், 'அடே, லலிதா உன்னை ரொம்ப கவனிக்கிறாள்!' என்றான்.

'சுந்தரம், இந்த மாதிரி கேலியெல்லாம் என்னிடம் வைத்துக் கொள்ளாதே! இவ்வளவு காலம் என்னுடன் பழகியும் என் சுபாவம் உனக்குத் தெரியவில்லையா?' என்று அவனைக் கோபித்துக் கொண்டேன்.

ஆனால், அவன் சொன்னதில் தப்பில்லை. லலிதா என்னிடம் இப்பொழுது இரண்டு மூன்று தினங்களாக ஏதோ விபரீதமாகத்தான் நடந்து கொள்ளுகிறாள். ஆனால், நான் அவளைப்பற்றி இழிவாக நினைக்க முடியாது. அவள் அப்பேர்ப்பட்ட பிறவியே அல்ல.

அவளுடன் பேசவேண்டுமென்று எனக்கு, அவளைப் பார்த்தது முதலே ஆவல். ஆனால், அவள் என்னைப்பற்றி தப்பாக நினைத்துக் கொண்டு விடுவாள் என்ற தயக்கத்தாலேயே நான் சும்மா இருக்கிறேன். என்னுடைய ஆவலுக்கு அவள் ஒரு கீழ்த்தரமான காரணத்தைக் கற்பித்து விட்டால் – பிறகு, அவள் என்னிடம் மரியாதையே கொள்ள மாட்டாள். மற்ற பெண்களெல்லாம் ஒரு கூட்டம்–அவள் ஒருதனிப் பட்சி.

இயற்கையாகவே நல்ல அழகு; செயற்கையிலும் சாதுரியமாக, ஆபாசமில்லாமல், அலங்கரித்துக் கொள்ளுகிறாள். புதுமைப் பெண் தான் – ஆனால், அவளிடம் மிதமின்மை இல்லை. எல்லைக் கோட்டை அறிந்திருக்கிறாள். எவ்வளவு பெண்களுக்கு அது தெரிகிறது?

அப்படிப்பட்டவள் இந்தமாதிரி நடந்து கொள்வது எனக்கு ஆச்சரிய மாகமட்டுமா இருக்கிறது? உள்ளத்தில் ஏதோ வேதனை. அது எதனால்?

அல்லது நான்தான் இவள் நடத்தையை தப்பர்த்தம் செய்கிறேனோ? இந்த மூன்று நாளும் அவள் எதிர்ப்படுவது ஒருவிதத்தில் சங்கடமாக இருக்கிறது – ஒரு விதத்தில் வேதனை – ஆனால், கொஞ்சம் இன்ப உணர்ச்சியும் இருக்கிறது.

அந்தி மயக்கத்தில், கடற்கரையோரப் பாதையில் கூட்டம் கொஞ்சம் குறைந்த சமயத்தில், அவள் எதிர்ப்படுவது ஒரு கனவு போலவே இருக்கிறது. நேற்று ஒருவிதமான மயக்கமே ஏற்பட்டுவிட்டது எனக்கு. நான் சிரமப்பட்டு நிதானித்துக் கொண்டேன். வெட்கமும் கோபமும் வந்தன. ஏன்?

அவள் முன்பு ஒருவேளை என் பலவீனம் வெளியாகி விட்டதோ

என்று வெட்கம் ஏற்படலாம். கோபம் ஏன் வந்தது?

மூன்று நாட்களாக என்னை இப்படி பலவிதமான உணர்ச்சிகளுக்கு உள்ளாக்கி வருத்துகிறாள் என்பது போன்ற காரணமா?

காலேஜில் மட்டும் முன்போலவே தான் இருக்கிறாள். அன்று நான் மீட்டிங்கில் பேசிய பொழுது – 'புதுமைப் பெண்ணின் ஸ்தானம்' என்பது விஷயம். லலிதாவைப் பற்றியேதான் நினைத்துக் கொண்டு பேசினேன்.

லலிதா! நீ இப்படி நடந்து கொள்வதால் உன்னிடம் நான் வைத் திருந்த மதிப்பு குறைகிறது என்று அவளிடம் சொல்லிவிடலாம் போல் இருக்கிறது.

இன்று அந்தப் பக்கம் போகாமல் வேறு பக்கம் போனால் என்ன?... கூடாது, கூடாது! எப்பொழுதும் போல, அவள் நடந்து கொள்வதைக் கவனிக்காதவன்போல நான் அந்தப் பக்கம் போகவேண்டும். என் மனப்போக்கு ஒரே குழப்பமாக இருக்கிறது. எனக்கே அது தெளிவாகத் தெரியவில்லை.

ஆனால், அவள்! இதென்ன மூன்று நாளாக இதே நினைப்பா? அப்படி அவள் என்ன என்னுடன் பேசிவிட்டாளா? எதற்காக எனக்கு இவ்வளவு உள்ளப் பதைப்பு? அவள் பாட்டிற்கு கடற்கரைப் பாதையில் போனால் எனக்கென்ன? வேண்டுமென்று என் எதிரே வருகிறாள் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்?

இல்லை! வேண்டுமென்றேதான் செய்கிறாள்–சந்தேகமில்லை! செய்யட்டுமே, நான் ஏன் சும்மா இருக்கக்கூடாது–அலட்சியமாக?

அப்படியிருக்க முடியாமல் போனதால்தான் எனக்கு கோபம் வருகிறது போலிருக்கிறது. ஏன் அலட்சியமாக இருக்க முடியாமல் போயிற்று?

புதுமைப் பெண்களைக் கண்டாலே எனக்கு வெறுப்பு–ஆனால், லலிதா எதனாலோ என் கண்களுக்கு அந்தக் கும்பலில் ஒருத்தியாகத் தோன்றவில்லை. கும்பலில் ஒருத்தி குறுக்கிட்டிருந்தால் நான் பொருட் படுத்தி இருக்கமாட்டேன். லலிதா என்முன் வருவதால்தான் இவ்வளவு கலக்கம்!

அந்தக் காரணத்திற்காக நான் அவளை மன்னித்துவிட முடியாது. யாராயிருந்தால் என்ன? என் வழிக்கு ஏன் வருகிறாள்? நான் மற்ற மாணவர்களைப் போல் இவர்களைப் பார்த்துப் பார்த்து ஏங்குகிறேனா?

லலிதா! அவளை நான் ஒரு நாள் கூட நன்றாகக் கண்ணெடுத்துப் பார்ப்பதில்லை. பரிசு வழங்கின தினத்தன்று தாங்கமுடியாமல் முதல் பரிசுப் புத்தகங்களைத் தூக்கிக் கொண்டு அவள் மெள்ள நடந்து வந்த பொழுது ஒரு நிமிஷம் மெய்மறந்து அவளைப் பார்த்தேன் – அவ்வளவு தான்!

லலிதா கூட என் ஜோலிக்கு வரக்கூடாது! வந்தால் நான் சும்மா இருக்கமாட்டேன். அவள் அவமானப்பட வேண்டியதுதான். என் கோபம் எப்படி உருவெடுக்கப் போகிறதோ?

**சுலோசனா**

லலிதாவின் கர்வம் இப்பொழுது அடங்கிவிடும். அவரிடம் இவள் பாச்சா பலிக்காது. மூன்று நாட்களாகத் தான் இவளும் நாளுக்கொரு நடையும் உடையும் போட்டுப் பார்க்கிறாள். அவர் கண்ணெடுத்துப் பார்க்கவில்லை.

இவளுக்கென்ன இவ்வளவு? ஒருத்தன் தவறாமல் எல்லோரும் இவள் காலடியில் வந்து விழவேண்டுமோ? அதென்ன ஆசை? கேட்டால், 'இல்லையடி, நான் என்று இல்லை. நம்மை எல்லோரையும் அலட்சியம் செய்ய இவருக்கு என்ன இவ்வளவு?' என்றாள்.

இவளுக்குத்தான் கொழுப்பு. அவருக்கு ஒன்றும் இல்லை. அவர் பாட்டிற்குத்தானே இருக்கிறார். இவளுக்கென்ன? இவள் தான் வலுச் சண்டை இழுக்கிறாள்.

ஆமாம், சண்டைதான் இது! அவர் பொறுமையுள்ள வரை சத்தியாக் கிரகிபோல் இருப்பார். தாங்காவிட்டால் சும்மா இருப்பாரா? அவரிடம் சரியாக இவள் வாங்கிக் கட்டிக்கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் எனக்குத் திருப்பதியாக இருக்கும்.

பின் என்ன? என்ன கர்வம், என்ன அலட்சியம்? இவள் சீமையி லிருந்து வந்து விட்டளோ? அதற்கென்ன, எல்லோரைக் காட்டிலும் அழகாக இருக்கிறாள். அதற்காக? இவள் கெட்டிக்காரியாக இருந்தால் இவள் மட்டுக்கும்.

'உனக்கேன் இவ்வளவு ஆத்திரம்? நீ அவருக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டிருக்கிறாயா?' என்றாள் என்னை!

'தாராளமாக வலை வீசு! எனக்கென்ன வந்தது? எனக்கொன்றும் பொறாமை இல்லை!' என்று நான் சொன்னதற்கு அவள் என்னை என்னவெல்லாம் சொல்லிவிட்டாள்!

'வலை வீசு!' என்று நான் சொன்னது அவளுக்குப் பொத்துக்கொண்டு வந்துவிட்டதாம்! வலை வீசாமல் பின் என்ன செய்கிறாள்? உண்மை யைச் சொன்னால் உடம்பெரிச்சல்தானே?

ஆனால், இவள் வலை வீச்சில் அவர் அகப்பட்டுக் கொள்ள மாட்டார்! அதென்ன அவர் அப்படி இருக்கிறார்? அதுவும் ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. பெண்ணைக் கண்ணெடுத்துப் பார்க்காத மனிதன் உண்டோ? அப்படியும் அப்பாவி ஒன்றும் இல்லை–ரொம்ப கெட்டிக்காரராக இருக்கிறார் – எல்லோருமே பாராட்டுகிறார்கள். ஏன் அதையும் சொல்லத்தான் வேண்டும். பெண்கள் பார்த்து கேலி செய்வார்களே

என்று சங்கோசப்பட்டு ஒதுங்க அழகற்றவரும் இல்லை. என்ன விபரீதமோ! அவரிடம் போய் லலிதா தன் சாகஸத்தைக் காட்டுகிறாள்.

ஒரு வேளை லலிதாவின் அழகும் செருக்கும் எனக்கிருந்தால் நானும் அப்படித்தான் செய்வேனோ என்னவோ?

மொத்தத்தில் லலிதா விஷப் பரீட்சை தான் செய்கிறாள். செய்யட்டும். பட்டால்தான் தெரியும். பிறகு சொல்லுவாள். நான் சொன்னது சரி யென்று. அதை நினைத்தால்தான் எனக்கு வருத்தமாக இருக்கிறது.

என்னவோ நான் சொன்னேன், அவள் கோபித்துக் கொண்டாள், நானும் மனஸ்தாபப்பட்டேனே தவிர அவள் கள்ளங்கபடமற்றவள். அதனால்தான் அவளிடத்தில் எனக்கு அவ்வளவு பிரியம். அவளும் என்னிடம் அப்படித்தான். இவ்வளவு நடந்ததே எங்களுக்குள்–அன்றன்று என்னிடம் கதை முழுவதும் சொல்லாவிட்டால் அவளுக்குத் தூக்கம் வராது.

நேற்றிரவுதான் லேசாகச் சொன்னாள்! 'சுலோசனா, நீ சொன்னது சரியாகும்போலிருக்கிறதடி! உனக்குத் திருப்தி தானே?' அவள் கண் களில் ஜலம் வந்துவிட்டது, எனக்கும் தாங்கவில்லை.

'என்னடி லலிதா இப்படிச் சொல்லுகிறாய்?' என்று அழுது விட்டேன். அவள் என்னைக் கட்டிக்கொண்டு விம்மினாள்.

'இவரால்தானே நம்மிருவருக்கும் மனத்தாங்கல்?' என்றேன்.

'அவரைச் சொல்லாதே! அவர் என்ன செய்தார்?' என்றாள்.

'ஓகோ, அதற்குள்...' என்று சிரித்தேன்.

'ஆரம்பித்து விட்டாயே!' என்று அவளும் சிரித்தாள்.

இன்று என்ன ஆகப்போகிறதோ தெரியவில்லை. நானும் போகப் போகிறேன், நான் பாட்டிற்கு உலவ. தூரத்திலிருந்து கவனித்தால் போகிறது–கிட்டே போக வேண்டாம்.

**சுந்தரம்**

நன்றாக வேண்டும் இவனுக்கு. மூன்று நாட்களாக முனைந்து வலை வீசுகிறாள் லலிதா. திணறுகிறான் பேர்வழி, சொல்லவும் முடியாமல் மெல்லவும் முடியாமல்.

நான் எச்சரித்ததற்கு என்மேல் சீறிவிழுந்தான். நீ எப்படி சொல்லப் போச்சு என்று குதித்தான். இரண்டு நாட்களாக ஆஸாமி 'ஸொரத் தில்லை.' பேசவே மாட்டேனென்கிறான்.

என்ன பேசுவான்? பேசவருமா விஷயம்? இன்னது செய்வதென்று அவனுக்குப் புரியவில்லை!

எல்லாம் இவனாக வரவழைத்துக் கொண்டது. சாதாரணமாக எல்லோரையும்போல இருக்காமல் இந்த மாதிரி கொண்டதால்தானே லலிதா இவனை லக்குவைத்து விட்டாள்? பெண்களுடன் பழகுவதில்

மற்றவர்கள்போல் இருந்திருந்தானானால் இந்த உபத்திரவமே இல்லை. பெண்களே தான் இடம் கொடுக்கிறார்களே, இவனுக்கென்ன வந்தது?

ஆனால், லலிதா செய்வதும் துடுக்குத்தனம். அவன் எப்படிப்போனால் இவளுக்கென்ன? அவன் சுபாவம். எப்பொழுதுமே பெண்களைக் கண்டால் அவனுக்கு சங்கோசம். அதுவும் இந்தப் படித்த பெண்ணைக் கண்டால் அவனுக்கு வெறுப்பு. என்னவோ அவன் போக்கு – கலியாணமே வேண்டாமென்றல்லவா இருக்கிறான்!

மனோதத்துவ ஆராய்ச்சி எல்லாம் செய்கிறான்; செயலில் சாமர்த்தியம் இல்லை. ஆராய்ச்சி எல்லாம் எவ்வளவு தூரம் உபயோகப்படும்?

எனக்கு ஒரு சந்தோஷம் – இதிலிருந்தாவது அவனுக்குப் புத்தி வரும். சரியாக நடந்துகொள்வான். ஆனால், அசட்டுத்தனமாகக் கோபங் கொண்டு ஏதாவது ஒன்று கிடக்க ஒன்று செய்துவிடப் போகிறானே என்றுதான் பயமாக இருக்கிறது.

மகா பிடிவாதக்காரனாக இருக்கிறான். அவளும் விடமாட்டாள். என்ன ஆகப்போகிறதோ?

கடற்கரைக்குத்தான் போகாமல் இருப்பானா? இருக்க மாட்டான். அதே வழியாகத்தான் போவான். இதை எப்படியோ அவள் தெரிந்து கொண்டிருக்கிறாளே – அதல்லவா வேடிக்கை!

எதற்காக அவள் இப்படிச் செய்கிறாள் என்று மட்டும் எனக்கு விளங்கவில்லை. பெண் உள்ளத்தின் போக்கு யாருக்குத் தெரிகிறது? இவன் தானா அகப்பட்டான் அவளுக்கு? எவ்வளவுபேர் இல்லை!

ஆனால் இவன் தானே விபரீதமாக இருக்கிறான். யாரும் இப்படி இல்லை. இருந்தால் என்ன? அவள் நோக்கம் என்னவோ தெரிய வில்லை. இன்று தெரிந்துவிடும்.

தெரிந்துவிடும்தான். இனிமேல் இருவரும் பொறுமை இழந்து ஏதாவது செய்வார்கள். எவ்வளவு நாட்கள்தான் இந்த மௌன நாடகம் நடக்க முடியும்? இனிமேல் தாங்காது. யாராவது வாய்விட்டுக் கொட்டித்தான் ஆக வேண்டும்.

அவள் கொட்டிவிடுபவளாகத் தோன்றவில்லை. வெகு அழுத்தம்; இவன் தான் பதட்டக்காரன். நான் என்ன செய்யமுடியும்? நான் நடுவில் போய் எப்படிக் குறுக்கிடுவது? அது ரஸாபாஸமாகப் போகும். இருவரும் போர் புரிந்து ஒரு முடிவு கண்டுபிடிக்கட்டும்–பார்ப்போம்!

பெண்களுக்குச் சுதந்திரம் கொடுத்தால் இது தான் பலன். வம்புச் சண்டைதானே இது? படிப்பவளா லட்சணமா, தன் ஜோலியைக் கவனிப்பாளா, இதெல்லாம் என்ன அதிகப் பிரசங்கித்தனம்?

அவனை வழிப்படுத்த இவள் தான் பிறந்தாளா?–என்னவோ, யார் கண்டார்கள்? அவன் வாய்வீச்செல்லாம் இப்பொழுது பார்க்கவேண்டும். நல்ல பரீக்ஷை இது?

சிரிக்கவா, அழவா?

இரண்டும் இல்லாமல் சந்தோஷப்பட வேண்டிய விஷயமாக இது முடிவடைந்தால்? உண்மையிலேயே சந்திரசேகரனுக்கேற்றவள்தான் லலிதா! அவள் அழகு பூராவும் அவள் கண்களில் இருக்கின்றது. அங்கங் களின் அசைவுகளில் இருக்கும் இயற்கை அவளறியாது வனப்பாக இருக்கிறபடியால் ஒவ்வொரு தடவை பார்க்கும்பொழுதும் புதிதாகவும் பொருந்தினதாகவும் இருக்கிறது.

புதுமைப்பெண்ணாக இருந்தாலும் லலிதாவின் நடை உடை பாவனை களில் விபரீதமோ வெறுப்பூட்டும் அதியோ இல்லவே இல்லை. அவளுடைய கூட்டத்தில் யாருக்குமே இல்லாத ஒரு நிதானம் அவளிடத்தில் தென்படுகிறது. கபடமில்லை என்று தெரிகிறது; ஆனால் சூடிகை இருக்கிறது. ஆர்ப்பாட்டம் இல்லை; ஆனால் கம்பீரம் இருக்கிறது; அசடில்லை, ஆனால் அடக்கமுள்ளவள்; ஆடம்பரம் இல்லை, அழகு இருக்கிறது.

தூரத்திலிருந்து கவனிக்கும்பொழுது அவளிடம் இவ்வளவு மேன்மை தென்படுகிறது-நெருங்கினால் இவை இன்னும் சிறக்குமோ அல்லது மறையுமோ-யார் கண்டார்கள்?

இப்பேர்ப்பட்டவள் அனாவசியமாக சந்திரசேகரனைத் துன்புறத்த மாட்டாள். காரணமிருக்கிறது. அந்தக் காரணத்திற்கு மூலம் சந்திர சேகரனா – ஆச்சரியமாக இருக்கிறதே! அவளைப் போல அவனும் தனித்தன்மை கொண்டிருக்கிறான் என்பதா காரணமாக இருக்கக்கூடும்? அவளுடைய யௌவன உள்ளத்தில் என்ன தூண்டுதலோ? அவள் அடக்கமே கட்டிப்பிடிக்க முடியாத ஒரு வேகம்-அதை இவன் எப்படிக் கிளறி இருக்கமுடியும்?

அந்தமாதிரி ஏதாவது இல்லாமல் லலிதா இப்படி நடந்து கொள்பவள் என்று எண்ண என் மனம் இடம் தரவில்லை. இரண்டு வருஷங்களாக அவள் இங்கே படிக்கிறாள். ஒருநாள், ஒரு தடவை – அவள் யோசனை யின்றியோ, அசட்டுத்தனமாகவோ எதுவும் செய்து நான் பார்த்ததில்லை.

சந்திரசேகரன் என்னிடம் அவள் நடத்தையைப்பற்றிச் சொல்லி யிருப்பான் என்ற எண்ணமோ என்னவோ மூன்று நாட்களாக என் கண்களில் படவில்லை. நாங்கள் இருவரும் எப்பொழுதும் சேர்ந்தி ருப்பது அவளுக்குத் தெரியும். மாலையில் அவன் உலவப்போகும் பொழுது நான் சங்கீதம் கற்கப் போய்விடுவேன். அதனால்தான் அந்த சமயத்தை அவள்–?'

என்னவோ எனக்கு ஒன்றும் புரியவில்லை. இவனும் ஒன்றும் என்னிடம் சொல்லவில்லை. சொல்லாமல் அவன் படுகிற அவஸ்தை தான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது.

சமூகத்தின் – வீட்டின் – உபத்திரவம் இல்லாமல் தனியாக இருந்து

கொண்டு காலேஜில் படிக்கும் மாணவனுக்குக் குறுக்கே அங்கேயும் ஒரு சமூகம் வந்துநிற்கிறது. இந்தக் கலப்புப்படிப்பு நல்லதா கெட்டதா என்று விவாதம் நடத்துகிறார்கள். பெண்களுக்குத்தான் மேரி கலாசாலை தனியாக இருக்கிறதே - இங்கேன் ராஜதானிக் கலாசாலைக்கு வருகிறார்கள்?

கலாசாலை எதற்கு? படிக்கவா–அல்லது–?

## லலிதாவும் சுலோசனாவும்

'ஏண்டி, லலிதா, எதற்காக இப்படி அழுகிறாய்? அந்தச் சிடுமூஞ்சி என்ன சொன்னார்? எனக்கு முன்பே தெரியும்–அப்படி 'முசிடு' மாதிரி இருப்பவர் ஏதாவது வெடுக்கென்று சொல்லி விடுவார் என்று. அதற்காகத் தான்...'

'அவரை அனாவசியமாக ஏன் தூற்றுகிறாய்? அவர் என்ன செய்தார்? அவரா என் ஜோலிக்கு வந்தார்? சுலோச், அவர் பேரில் ஒரு பிசகில்லை. சொல்லப் போனால் அவர் வெகு மரியாதையாக நடந்து கொண்டிருக் கிறார்!'

'அவர் ஒன்றும் சொல்லவில்லையா ஆனால்?பின் ஏன் இப்படி அழுகிறாய்?'

'ஏதாவது வைதால்தான் அழுகை வருமா, சுலோச்? இன்னும் நீ பச்சைக் குழந்தையாய் இருக்கிறாயே - உனக்கு ஒன்றும் தெரிய வில்லையே!'

'பின் எதற்காக அழுகிறாய் சொல்லேன்!'

'சொல்லித்தான் உனக்குத் தெரியவேண்டும் போலிருக்கிறது. ஐயோ சுலோச்! நீ சுத்த அப்பாவியாக இருக்கிறாயே!'

'ஆமாம், நான் அப்பாவிதான்! உன்னைப்போல் பிற புருஷனைப் பப்ளிக் ரோடில் வழிமறித்துக்கொண்டு பேச எனக்குத் தெரியாதுதான்.'

'உன்னை யாரடி அங்கே வரச்சொன்னார்கள்?'

'பீச்ரோடு உன் சொந்த காதற்சாலையோ?'

'உனக்கேன் அவ்வளவு வம்பு? நீ பாட்டிற்கு இராமல்...'

உன் வம்பைக் காட்டிலும் அதிகமில்லையே!'

'நானும் அவரும் எப்படிப் போனால் உனக்கென்ன? நீ எதற்காக...?'

'நான் பாட்டிற்கு பாதை வழியே போகிறேன். உனக்கென்ன?'

'பாதை வழியாகத்தான் போனாய்! என் முன்னால் சங்கடப்பட்டது போதாதாக்கும் அவர்–உன் முன்பும் சங்கடப்பட வேண்டுமோ?'

'ஓகோ, இதென்ன! அவர் பேரில் இவ்வளவு இரக்கம் வந்து விட்டதா உனக்கு? எப்பொழுது முதல்?'

'விளையாடாதே. உனக்குச் சமயமே தெரியவில்லை. மனிதன் என்றால் அவர் தான் மனிதன்!'

'அடியம்மா! இதென்ன கூத்து?'

'எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டிருந்தாயே, என்னை ஏன் கேட்கிறாய்?'

'பார்க்கவும் இல்லை, கேட்கவும் இல்லை. நான் என்ன அவ்வளவு மோசம் என்று நினைத்துவிட்டாயா? நான் விலகிப் போய்விட்டேனே!'

'ஆனால் நீ பார்க்க வில்லையா அவர் கோபத்தையும் பச்சாதாபத்தையும்?'

'அதென்ன! கோபமிருக்கலாம். பச்சாத்தாபம் எதற்காக?'

'என் பாதையில் இப்படிக் குறுக்கிட உங்களுக்கு என்ன உரிமை? மற்ற பெண்களைப் போலல்ல நீங்கள் என்றல்லவா எண்ணியிருந்தேன்!' என்றார் அவர் கண்கள் சிவக்க–நான் பிரமித்து போனேனடி! நான் வேண்டுமென்று குறுக்கிடவில்லை என்று எப்படிப் பொய் சொல்வது? அவர் திடீரென்று நேர்மையாக அப்படிக் கேட்டவுடன் நான் மறு வார்த்தை சொல்லமுடியாமல் அப்படியே கலங்கி நின்று போய் விட்டேன்! அவர் அப்பொழுது வேறு ஆள் போலவே தோன்றினார் – ஏனோ என்னை அறியாமல் என் கண்கள் கலங்கிவிட்டன. மறு நிமிஷம் 'மன்னிக்க வேண்டும்' – அதைத்தான் அப்பொழுது எனக்குச் சொல்லத் தெரிந்தது – என்று சொல்லிவிட்டுத் திரும்பினேன்...'

'ஐயையோ, அப்புறம்? அட பாபமே, இப்படியா முடியவேண்டும் உன் முயற்சி! அப்புறம்...?'

'அப்புறம்தானடி ஆச்சரியம்!'

'அதென்ன ஆச்சரியம்?'

'திடீரென்று அவர் என் எதிரே வந்து, 'லலிதா, நான் ஏதோ கோபத்தில் பிதற்றி விட்டேன். என் பலவீனத்தை மறைக்க உன்னைக் குற்றம் சாட்டி விட்டேன் – மூர்க்கனாக நடந்து கொண்டு விட்டேன். என் மேல்தான் பிசகு, லலிதா! ஒன்றுமில்லை – நான் விலகிப் போயிருக்கலாமல்லவா வேறு பக்கமாக?' என்றார்.'

'இதென்ன இழவு?'

'அந்த நிலைமையில் நீ என்னடி செய்வாய்?'

'எனக்கு அந்தமாதிரி நிலைமையே ஏற்படாதம்மா! உனக்குத்தான் ஏற்பட்டது, என்ன செய்தாய்?'

'என்னடி செய்யமுடியும் முன்னாலும் போகமுடியவில்லை. பின்னாலும் போகமுடியவில்லை. அப்படியே...'

'அவர்மேல் சாய்ந்துவிட்டாயோ மூர்ச்சை போட்டு?'

'சீ சீ, அசட்டு பிசட்டு என்று பேசாதே!'

'பின் 'அப்படியே' என்ன செய்தாய்?'

'வெட்கத்தால் குன்றி நின்று போனேன்!'

'நல்ல வேளை! வேறொன்றும் செய்துவிடவில்லையே! அவர்

ஒன்றும் செய்யவில்லையா?'

'அவரை என்ன செய்யச் சொல்லுகிறாய் நீ?'

'இல்லை ஏதாவது, உன் வெட்கம் நீங்கும்படியாக...'

'சீ, இந்த மாதிரி எல்லாம் நீ பேசினால், அப்புறம் நான்...'

'எந்தமாதிரி பேசிவிட்டேனம்மா? எடுத்ததற்கெல்லாம் உனக்கு கோபம் வருகிறது. நான் எதற்காக...'

'கோபமில்லையடி! அவர் ஒன்றும் செய்யாதபோது நீ...'

'நான் ஒன்றும் சொல்ல வில்லை. நீ சொல்லு!'

'எப்படியடி சொல்வது?'

'சொல்ல முடியாதோ, ஆனால்?'

'சொல்ல முடியாதது ஒன்றுமில்லை...'

'பின் ஏன் இழுக்கிறாய்?'

'ஞாபகமில்லை!'

'நடந்தபடியே சொல்லு, நினைவு வரும்.'

'கைமறையும் நேரமல்லவா–கூட்டம் யாருமில்லை. அவர் அப்படிச் சொன்னதும் நான், 'நான்தான் வேண்டுமென்று' என்று வாயெடுத்தேன். 'நான் மூன்று நாட்களாக யோசித்துப் பார்த்துவிட்டேன். நான் தான் உன்னை இப்படித் தூண்டியவன்' என்றார். என்ன பேசுகிறது என்று தெரியாமல் நான் ஏதாவது பேசவேண்டுமே என்று 'இருட்டுகிறதே, போவோமா?' என்றேன். 'போகலாம், அவசரமென்ன?' என்று என் கையைப் பிடித்து ஒரு பெஞ்சுக்கு அழைத்துக் கொண்டு போனார்.'

'நீயும் வாயை மூடிக்கொண்டு போனாயாக்கும்!'

'பின் என்னடி செய்வது?'

'வேறென்ன செய்து–நன்றாயிருக்கிறதே! ஒரு மனிதன் கையைப் பிடித்திழுத்தால்...'

'அவர் இழுக்கவில்லை...'

'போருமடி லலிது! உன் வீராப்பெல்லாம் ஒழிந்ததா ஒருமட்டாக! அது கிடக்கிறது....'

'சற்று நேரம் மௌமாக இரண்டுபேரும் அங்கே உட்கார்ந்திருந்தோம்.'

'அந்த பெஞ்சு... அது பெஞ்சல்ல...'

'சலோச், எப்பொழுதாவது நீ அந்த மாதிரி உட்கார்ந்திருக்கிறாயா? சொல்லடி!'

'ஐயையோ என்னை ஏன் இப்படிக் கட்டிக்கொள்கிறாய்? மிரட்டப் போனவள் மிரண்டு கொண்டு வந்தாளாம்!'

**சந்திரசேகரனும் சுந்தரமும்**

'லலிதாவை நீ மற்றப் பெண்களைப் போல் நினைத்து விடாதே!'

'பின் எப்படி நினைக்கச் சொல்லுகிறாய்?'

'ஷா சொல்லும் சிலந்திப்பூச்சி போன்ற சுபாவம் கொண்டவள் அல்ல அவள்.'

'எப்படிக் கண்டுபிடித்தாயோ?'

'ஆழ்ந்த மனோதத்துவ உணர்வு பெற்றவள்.'

'ஒகோ!'

'அவள் என்னைத் தொடரவில்லை.'

'பின்?'

'நான்தான் அவளை என் உள்ளத்தில் தொடர்ந்து திரிந்தேன். வெளியில் பராமுகமாக இருப்பது போல் இருந்தேன். எனக்கே அது நன்றாகத் தெரியவில்லை. அதை அவள் அறிந்து என்மேல் பரிதாபங் கொண்டு...'

'சபாஷ், சபாஷ்!'

'உனக்குக் கேலியாக இருக்கும். ஆனால் உண்மையான பெண் அவள்தான்!'

'ஞானோதயம்தான்!'

'என்மேல் மூடியிருந்த போலி ஓட்டை அவள் உடைத்துவிட்டாள். நானும் இப்பொழுதுதான் உண்மையான உணர்ச்சி படைத்தவனாக ஆகி இருக்கிறேன்'.

'ஆழ்ந்த விஷயமாக இருக்கிறது. கொஞ்சம் புரியும் படி சொன்னால் தேவலை.'

'புரிவதற்கு என்ன இருக்கிறது?'

'ஆனால் ஒன்றும் புரியாதோ?'

'இது தானடா விஷயம். நாம் இவ்வளவுபேர் மாணவர்களில் நான் ஒருவன்தான் அவளிடம் முற்றிலும் ஈடுபட்டவன் என்று என் நடத்தையிலிருந்து அவள் கண்டு கொண்டாள். அந்த ஊகம் அவளுக்கு எப்பொழுது ஏற்பட்டதோ அதிலிருந்து அவளும் என்னிடத்தில் முற்றிலும் ஈடுபட்டிருக்கிறாள் என்று அறிவித்தாள்.'

'அதனால்தான் கடற்கரையில் இந்த ஓடிப்பிடிக்கிற விளையாட்டாக்கும்?'

'லலிதா தன் மனதை எவ்வளவு இங்கிதமாக வெளியிட்டிருக்கிறாள். என் மனதைக்கூட எவ்வளவு அனுதாபத்துடன் எனக்குத் திறந்து காட்டியிருக்கிறாள்!'

'நீ இனிமேல் கவிதை எழுதலாம்.'

'எழுதவே முடியாது!'

'பேசினதையாவது கதையாக...'

'பேச்சேது?'

'பேச்சுமில்லையா? பின்?'

'பரஸ்பர அறிவு–அதாவது...'

'தெரிகிறது–பேச்சுக்கும் அடங்காத சமாசாரம்.'

'நீ கிண்டல் செய்கிறாய்!'

'கிண்டலா, சரியாப் போச்சு! லலிதா முதலில் கிண்டல் பண்ணு வதாகத்தான் நீ எண்ணினாய்!'

'லலிதா...'

'நான் ஒன்றும் சொல்லவில்லை அவளைப்பற்றி–நீ சண்டைக்கு வராதே!'

'அவளைப் பற்றி நீ என்ன சொன்னாலும் தகும்.'

'சந்திரா, சந்திரா! ஏன், ஏன் நின்று விட்டாய்?'

'இந்த இடத்தில் தானடா அவள்...'

'புனிதமான இடம்!'

'இருட்டுகிற சமயத்திற்கும் மனத்தில் அறிவு மயங்கும் நிலைக்கும் ஒத்திருந்தது. அவளுடைய புத்தி சாதுரியமும், இங்கிதமும், அடக்கமும் ஒரு கவர்ச்சிதான். ஆனால் பெண்ணின் உடலில் ஏதோவொரு மயக்க மருந்து இருக்கிறது. அது நெருங்கியதும் ஏககாலத்தில் பஞ்சேந்திரியங் களும் மயங்கிவிடுகின்றன. குளோரோபாரம் சுவாஸத்தை பாதித்திருக் கிறது. அனஸ்தெடிக் என்ற மருந்து ஸ்பர்சத்தை பாதிக்கிறது. இவை அந்தந்த இந்திரயங்களை முற்றிலும் ஸ்மரணையற்றுப் போகச் செய்கின்றன. ஆனால், பெண் மருந்தோ அவற்றை மயக்கியும், புத்துயிர் ஊட்டியும், ஸ்மரணையுடன் இன்பம் கொள்ளச் செய்கின்றது.'

'அருமருந்தொரு' என்ற மாதிரி நீ ஒரு பெண் மருந்துப் பாட்டுப் பாடலாம். இதெல்லாம் உன்னுடைய புது அனுபவங்களாக்கும்!'

'இவை மட்டுமல்ல. இவை சதாம்சத்தில் ஒரு பங்கு தான். சுந்தரம், உனக்கு ஒரு நாள் இவை நான் சொல்லாமல் தெரியும். இந்த பெஞ்சில் தான் உட்கார்ந்தோம். நெருங்கி உட்கார்ந்தால் பேச்சுக்கு அவசியமே இல்லை.'

'அப்படி நெருங்கி உட்கார்ந்திருக்கும் பேர்வழி மிஸ் லலிதாவாக இருக்கவேண்டும்.'

'இருட்டடிப்பல்லவா? இருட்டில் சற்று பின் நக்ஷத்திரங்களின் ஒளி வீசிற்று–இருவரும் கையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தோம். இருவர் எண்ணங்களும் அப்பொழுது கைகளைப் போலக் கலந்து நின்றன. ஸ்பர்சத்தின் மூலம் எவ்வளவு பரஸ்பர பரிசயம் ஏற்படு கிறது – ஆச்சரியமாக இருக்கிறது. பேச்சால் கூட அவ்வளவு தெளிவு ஏற்படுவதில்லை.'

'இடம், காலம், பாத்திரம் என்று நாடகத்தில் போடுகிறார்களே– அவையும் சரியாக இருக்கவேண்டும்.'

'கடற்கரையே ஒருவிதமான ஏகாந்தத்தில் அமர்ந்து விட்டது போலி ருந்தது. அலைகள் மட்டும்தான் அட்டகாசம் செய்து மாரீச்சுபாகுக்கள் போல யாகத்தின் தூய்மையைக் கலைக்க முயன்று கொண்டிருந்தன.

ஜில்லென்று மெல்ல வீசின காற்றாலோ என்னவோ அவளுடைய கை நடுங்கிற்று.'

'அந்தரங்கமாக நடந்ததை எல்லாம் என்னிடத்தில் பாடம் ஒப்பு வித்து விடாதே! பிறகு மிஸ் லலிதா...'

'ப்ரௌனிங் சொல்வதுபோல முதல்தரமான முதல் மோகவின் பத்தைத் திரும்ப நினைத்துச் சொல்லுவதே இன்பம்.'

'அதுதான் கவிதை என்கிறார்கள்!'

'கவிதையில் பாதி விஷயங்கூட வராது.'

'வந்தது மட்டில் அது உண்மைதானே!'

'லலிதா என்னை ஏன் தேடிப்பிடித்தாள், சுந்தரம்? அது தான் எனக்கு விளங்கவில்லை.'

'அவளைக் கேட்கிறதுதானே!'

'கேட்டேன், அவளுக்கே தெரியவில்லை. வாழ்க்கை முழுவதும் இந்தக் கேள்விதான் என் உள்ளத்திலிருந்து பிறக்கும்; அவளும் அந்த ஒரே பதிலைத் தான் சொல்லுவாள்.'

'அசல் கவிதை – கீட்ஸைப் போலவே இருக்கிறது.'

'உனக்குத் தெரிகிறதா ஏன் என்று?'

'நீ நீயாக இருப்பதாலும், அவள் அவளாக இருப்பதாலும்தான்!'

'எப்படியடா கண்டுபிடித்தாய்!'

'வேறென்ன?'

'வெறும் பால் உணர்ச்சியாக மட்டும் இருக்க முடியாது.'

'அப்படியானால் அதுவும் உண்டு என்று இப்பொழுது ஒப்புக் கொள் கிறாய்–அந்தமட்டில் முன்னேற்றம்தான்.'

'மனதுதான்...'

'உன் வாக்குமூலப்படியே நீ இதுவரை எதிர்த்துவந்த கொள்கை முற்றிலும் உன் விஷயத்திலேயே உண்மையாகிவிட்டது.'

'என் வாக்குமூலத்தில் என்ன அத்தாட்சியைக் கண்டு விட்டாய்?'

'சொன்னால் கோபித்துக் கொள்ளக் கூடாது.'

'இல்லை, சொல்!'

'முதலிலிருந்தே லலிதாவின் உருவம் உன் மனதைக் கவர்ந்ததால் தான் நீ உள்ளத்தை மறைக்கவும் ஏமாற்றவும் அவளிடம் அலட்சியமாக மேலே நடந்துகொண்டாய்.'

'நான் மற்ற பெண்களிடமும் அலட்சியமாகத்தான் இருந்தேன்.'

'அவர்கள் அதை சட்டை செய்யவில்லை. இவள் தான் செய்தாள்– ஏன் தெரியுமா? மிஸ் லலிதாவுக்கு உன்னிடம் மதிப்பு–அந்த வார்த்தை போதும்–ஏற்பட்டது அதனால் தான்.'

'என் நடத்தையில் என்ன?'

'அந்த நடத்தையேதான் அவள் பெண் உள்ளத்தில் உன் நிலையின்

உண்மையை குத்திக் காட்டிற்று. உன் உள்ளத்தைப் பற்றி அவள் செய்த ஊகம் சரி என்று தெரிந்து விட்டது. புத்திசாலியான ஒரு வாலிபன் அழகு மிக்க ஒரு பெண்ணைப் பார்த்து ஏங்குவதைப் பிறர் (அவளும் தான்) அறியக்கூடாது என்று மறைத்தால், பிறர் பார்க்காவிட்டாலும், புத்தி சாலியாக இருந்தால், அவள் பார்த்துவிடுகிறாள்.

'இதெல்லாம் உன் மனோபாவம்.'

'அதுதான் உண்மை! சரி, வா போவோம்!'

'எங்கே?'

'ஓகோ, ஞாபகமில்லை! சரி, போய்விட்டு வா!'

**லலிதாவும் சந்திரசேகரனும்**

'காலேஜில் எவ்வளவு பேர் இருக்கிறார்கள். என்னை ஏன் பொறுக்கி எடுத்தாய்?'

'எனக்கே சரியாகத் தெரியவில்லை.'

'மற்ற மாணவர்களைப்போல விஷமப் பார்வைகள் பார்த்தேனா? நான் பாட்டிற்கு இருந்தேனே?'

'அதனால்தானோ என்னவோ?'

'அவர்களைப்போல் நானும் உன்னை கவனித்திருந்தால்?

'ஒதுக்கி இருப்பேன்!'

'உன்னை நான் எல்லோரையும் போலப் பார்த்து ஏங்க வில்லை என்பதற்காகவா நீ ...?'

'அதுதான் காரணம் என்று மனப்பூர்வமாக முதலில் எண்ணினேன். ஆனால் அது என் உள்ளம்...'

'சொல், லலிதா, வெட்கப்படவேண்டியது இதில் ஒன்றுமில்லை.

'நானே முதலில் ஆராய்ந்தறியாத ஒரு தூண்டுதலுக்கு நான் ஏற்படுத்தின காரணம் அது.'

'இப்பொழுது அது என்ன என்று தெரிகிறதா?'

'போங்கள். என்னைக் குறுக்கு விசாரணை செய்கிறீர்களா?'

'இல்லை, மனப்போக்கை ஆராய்வதற்காகக் கேட்கிறேன்.'

'அதற்கெல்லாம் அடங்கிவராது அது. மேலும் அது இப்பொழுது எதற்கு?'

'பின்?'

'இப்பொழுது யோசிக்க வேண்டிய விஷயம் மற்றொன்று.'

'என்ன, சொல்லேன்!'

'இனி நாம் எப்படி ஒருவரை ஒருவர் பார்க்காமல் இருப்பது?'

'ஏன் பார்க்காமல் இருக்கவேண்டும்?'

'ஏனென்றால்...பார்த்துப் பேசிப் பழகுவது மேலும் மனத்திற்குக் கலக்கம்...'

'கலக்கம் என்று ஏன் எண்ணுகிறாய்?'

'வாழக்கையில் நாம் புருஷன் மனைவி ஆக முடியாது என்ற நினைப்பு அடியில் உறுத்திக் கொண்டே இராதா?'

'அதென்ன? ஏன்? ஏன் புருஷன் மனைவியாக முடியாது?'

'ஏன் என்று கேட்கிறீர்களே. உங்களுக்குத் தெரியவில்லையா?'

'தெரியவில்லை. நீ வியக்தமாகச் சொல்லு!'

'நம்மைப் புருஷன் மனைவியாக்கும்படியாக இந்த உணர்ச்சி பொங்கவில்லை, அதாவது என் உணர்ச்சி.'

'அது பொங்கும்படி செய்வது என் ஊக்கம்.'

'அது தானாகவல்லவா எழ வேண்டும்–நிரந்தரமாக இருப்பதற்கு?'

'அல்ல, அந்தக் கிளர்ச்சியை என் ஆர்வமும், ஆவலும், புகழும், போற்றலும்தான் ஏற்படுத்தவேண்டும்.'

'இந்த விஷயத்தில் அனுபவமே இல்லாமல் அதை மட்டும் எப்படி அறிந்தீர்கள்?'

'என் உள்ளத்தின் அறிவால்தான்!'

'அது வேறா? ஆனால்?'

'ஆமாம், பெண் உள்ளத்தின் போக்கும் ஆண் உள்ளத்தின் போக்கும் வேறு.'

'அதனால்தான் ஒருவரை ஒருவர் அறிந்து கொள்ளாமல் வாழ்க்கையில்...'

'போக்குகள் வேறு பட்டாலும், இங்கிதத்தாலும் அனுதாபத்தாலும் பரஸ்பரம் அறிந்துகொண்டு சமரஸமாகப் போகலாம்.'

'சமரஸமா, அது உபயோகமில்லையே!'

'சமரஸமின்றி வாழ்க்கை நடைபெறாது!'

'சமரஸம் சாவுக்குச் சமானம் என்று மெரிடித் சொல்ல வில்லையா?'

'சமரஸம் சாவுதான். ஆனால்... ட்சிகளில் ஒன்றும் முற்றி... வதில்லை. இரண்டும் சிறி....த்து மிஞ்சினவை ஒன்று ....ன்றன.'*

'நீங்கள் சொல்லுவது தத்துவமாக இருக்கிறது. எனக்கு அர்த்தமாக வில்லை.'

'அனுபவத்தில் தான் அர்த்தமாகும்.'

'உங்களுக்கு மட்டும் எப்படி தெரிந்தது?

'அனுபவத்தின் பூர்வாம்சமாகிய மனோபாவத்தால் அறிகிறேன்.'

'அது எனக்கு இல்லை என்கிறீர்களா?'

'இருந்திருந்தால் இந்தக் கேள்வியே பிறந்திருக்காதே!'

'அப்படியானால்... நீங்கள் சொல்வதுபோல ஒருவருக்கு மனோ

* இந்தப் பாராவில் அச்சுப் பிரதியால் காகிதம் கிழந்து இருப்பதால் சில வார்த்தைகள் தெரியவில்லை.

பாவம் இருந்து மற்றொருவருக்கு இல்லாமற் போனல் இருவரும் எப்படி சேர்ந்து வாழ்வது?'

'ஒருவருக்கு இருந்தால் போதுமானது. இருவருக்கு இருந்தால் அவ்வளவு நல்லது கூட அல்ல.'

'அதேன்?'

'மனோபாவங்களில் வேறுபாடு தோன்றும்.'

'என்ன சங்கடம்? என்னதான் செய்கிறது பின்?'

'ஒருவரிடம் மற்றவர் அதிகம் எதிர்பார்க்காமல் கூடியவரையில் ஒருவர் மற்றவர் போக்கை அனுசரித்தே வாழ்க்கை நடத்தினால் சுகமும் சௌகரியமும் ஏற்படும்.'

'மற்றவர் போக்கை அனுசரித்தால் சுதந்திரம் ஏது?'

'அதுதான் சுதந்திரத்திற்கே வழி என்று இன்னும் நீ அனுபவத்தில் அறியவில்லையா? ஆனால் காதலர்கள் இந்த மாதிரிதான் தர்க்கவாதம் செய்து கொண்டிருப்பார்களா?'

'காதலர்களா? அந்த வார்த்தை வேண்டாம்!'

'பின்?'

'எது வேண்டுமானாலும்!'

'புருஷன் மனைவி!'

'அதுவும் பயமாக இருக்கிறது.'

'என்ன பயம்?'

'நான் சரியான மனைவியாக இருப்பேனா?'

'நான் சரியான புருஷனாக இருப்பேனா என்பதைப் பொறுத்திருக் கிறது.'

'அது தெரியாமல் எப்படிப் புருஷன் மனைவி ஆகலாம்?'

'தெரியாமலென்ன? உனக்கு நான் சரியான புருஷனாக இருப்பேன், சரிதானே?'

'..................'

'என்ன, பதில் இல்லை?'

'என்ன பதில் சொல்லட்டும்?'

'சரி என்ற பதில்தான்!'

'பதில் சொல்லாவிட்டால்?'

'சொல்லச் செய்வேன்!'

'செய்வீர்களோ?'

'ஓ!'

'எங்கே.... பலாத்காரமல்லவா இது?'

'சத்தியாக்கிரகியாக்கும்!'

'இதுதான் நாம் படித்த படிப்போ?'

'ஆமாம், சந்தேகமென்ன?'

'இதற்குக் காலேஜ் வேண்டுமா?'

'நிச்சயமாக; இல்லாவிட்டால், நீ என்னை எப்படி...'

'சரிதான், எல்லாம் நான் தானாக்கும்?'

'இல்லை, நான் உன்னை எப்படி...'

'என்னை என்றாவது இதற்குமுன் கண்ணெடுத்துப் பார்த்திருக்கிறீர்களா?'

'பார்த்திருக்கிறேனே!'

'நான் கவனிக்கவில்லையே!'

'அவ்வளவுதான் உன் சாமர்த்தியம்?'

'இது முன்பே தெரிந்தால்....'

'தெரியாமல்தான் செய்தேனே!'

'இருக்கட்டும், சொல்லுகிறேன்.'

'என்ன சொல்லப் போகிறாய்?'

'உங்களோடு பேச என்னால் முடியாது. நான் படிக்கப் போகிறேன். பரீட்சை வந்துவிட்டது.'

'இனிமேல் சேர்ந்து படிப்போம். பரீட்சையைப் பற்றி கவலைப் படாதே!'

'ஏன்?'

'இந்தப் பரீட்சை முடிந்துவிட்டது. பாஸ் செய்து விட்டோம். இனி எந்தப் பரீட்சையைப் பற்றி நாம் கவலைப் படவேண்டும்?'

'இந்தப் பட்டம் சோறு போடுமாக்கும்?'

'சோற்றுக்கென்ன, லலிதா, நீ இருக்கிறபொழுது!'

'ஆரம்பித்துவிட்டீர்களா!'

## 2

சென்னை,

*5–1–40*

அன்பார்ந்த அக்காவுக்கு சுலோசனா நமஸ்காரம்.

நீ ஊருக்குப் போன பிறகு ஏன் கடிதமே போடவில்லை? உனக்கு அந்தக் குக்கிராமத்தில் எப்படிப் பொழுது போகிறது?

பரீட்சைக்கு இன்னும் இரண்டு மாதங்கள் தான் இருக்கின்றன. நான் ஒன்றும் படிக்கவே இல்லை. அதற்குள் காலேஜில் ஒரு பெரிய வேடிக்கை.

உங்கள் கிராமத்திலிருந்து வந்து இங்கே காலேஜில் ஒருவர் படிக்

கிறார். அவர் பெயர் சந்திரசேகரன். நிரம்ப கெட்டிக்காரர். பரமஸாது, அவர் என்னுடன் கூடப் படிக்கும் லலிதா என்ற பெண்ணின் வலையில் அகப்பட்டுக் கொண்டுவிட்டார். பார்க்கிறதற்கு பெண்களை லட்சியமே செய்யாதவர்போல் இருந்தார். தலையெடுத்துப் பார்ப்பதில்லை- பேசுவதில்லை. அப்படிப்பட்டவர் இந்தமாதிரி அகப்பட்டுக்கொண்டது காலேஜிலேயே ஒரு பெரிய கிளர்ச்சியை உண்டாக்கிவிட்டது.

காதலர்களாக ஆனதுடன் விட்டார்கள் அவர்கள் என்கிறாயா? இருவருமாகத் தனியாக ஒரு ஜாகை பார்த்துக் கொண்டு குடி இருக் கிறார்கள்! லலிதா என் அந்தரங்கமான தோழி, அவள் கெட்டவள் அல்ல. எல்லாவற்றையும் என்னிடம் சொல்லுவாள். ஆனால் அவள் இந்தமாதிரி கல்யாணம் செய்து கொள்ளுவதற்குமுன் தனிக்குடித்தனம் நடத்துவது எனக்கே பிடிக்கவில்லை. அப்படியே அவளிடம் சொன்னேன். 'அதனால் என்ன' என்கிறாள் அவள்.

காதல் என்கிறார்களே, அக்கா, அதென்ன என்று எனக்குத் தெரிய வில்லை. புத்தகங்களில் படித்திருக்கிறேன். நீ அத்திம்பேரை காதல் கொண்ட பிறகுதான் கலியாணம் செய்துகொண்டாயா? என் தோழி சொல்லுவதெல்லாம் எனக்கு வேடிக்கையாக இருக்கிறது? நடுவில் சிரித்து விடுகிறேன். அவள் கோபித்துக் கொள்கிறாள். என்னென்ன சொல்லுகிறாள் என்கிறாய்! பத்து நாட்களுக்கு முன்பு அவரைக் கேலி செய்துகொண்டிருந்தாள், இப்பொழுது அவரைப்போல யாருமில்லை என் சொல்லுகிறாள்.

இதில் இன்னும் என்ன வேடிக்கை தெரியுமோ? அவர் இவள் பக்கம் வரவில்லை. இவளாகத்தான் போய் அவரைச் சந்தித்து பேச்சுக்கிழுத்து இவ்வளவு தூரம் வந்துவிட்டது. இதையும் நான் சொல்லவேண்டும். இந்த மாதிரி அவருக்கும் தனக்கும் ஏற்படும் என்று லலிதா முதலில் நினைக்கவேயில்லை. அது எனக்கு நிச்சயமாகத் தெரியும். திடீரென்று தான் இது ஏற்பட்டது. எப்படி என்று அவளைக் கேட்டேன். தெரிய வில்லை என்கிறாள். நிஜமாக இருக்குமா, அக்கா? ஆனால் லலிதா பொய் சொல்லமாட்டாள்.

அவள் அவரைச் சந்தித்த பிறகு ஒவ்வொரு நாளும் என்னிடம் சொல்லும் விஷயங்களெல்லாம் எவ்வளவு விசித்திரமாக இருக்கின்றன என்கிறாய்! புத்தகப் படிப்பினால் ஏற்பட்ட அனுபவத்தில் சிலவற்றை அறியவே முடியவில்லை. நான் காதல்கொண்டால்தான் அதெல்லாம் எனக்கு நன்றாக அர்த்தமாகுமாம், லலிதா சொல்லுகிறாள்.

அவள் சொல்லுவதிலிருந்து காதல் என்பது வெறும் அழகைப் பார்த்து மயங்குவது மட்டும்அல்ல என்பது தெரிகிறது. சரீர அழகு கொடுக்கும் மயக்கம் சிறிது நேரம் தான் இருக்கிறது என்பதை நானே தெரிந்துகொண்டிருக்கிறேன். சில மாதங்களுக்குமுன் ஒரு மாணவன்

என்னைப் பார்க்கும்பொழுதெல்லாம என்னை கவனிக்க ஆரம்பித்தான். இரண்டு மூன்று நாள் நான் பாட்டிற்கு இருந்தேன். அவன் தைரிய மடைந்து என்னைக் கண்ணெடுத்து உற்றுப் பார்க்க ஆரம்பித்தான். நான் உடனே என் ஆட்சேபணையைக் குறிப்பாகக் காட்டினேன். அதுமுதல் அவன் என்னைப் பார்ப்பதில்லை. அவன் மயக்கம் நிரந்தரமாக அவனைப் பிடிப்பதாயிருந்தால் அவன் நிறுத்துவானா?

அக்கா, என்னமோ எழுதுகிறேன். போதும் என் அசட்டுத்தனம். ஐயோ! இதைக் கிழித்துவிடு!

உன்
சுலோசனா

திருவெழுந்தூர்,
*7–1–40*

என் அருமை சுலோசனாவுக்கு,
உன் கடிதம் கிடைத்தது. இங்கே பொழுதே போக வில்லைதான். ஆனால் நானும் இங்கே வந்து அக்கம்பக்கத்தாருடன் வம்பு போசக் கற்றுக்கொண்டுவிட்டேன். ஏதாவது சமாசாரம் கொண்டுவருகிறார்கள் பேச, புதிது புதிதாக! எனக்கு ஒன்றுமில்லையே என்று நினைத்தேன். உன் கடிதம் வந்தது.

சந்திரசேகரன் இந்த ஊர் பையன்தான். ராமஸ்வாமி சாஸ்திரிகள் என்று ஒரு வைதிகக் கிழவர் இருக்கிறார். அவர் பிள்ளை. அவர் அகமுடையாள் பாவம் அவ்வளவாக வம்பு பேசுவதில்லை. அவள் பெண் ஒருத்தி வந்திருக்கிறாள் இங்கே, அப்பா, என்ன வாய்த்துடுக்கு.

நீ எழுதியிருந்த விஷயத்தை நேற்ற வீட்டுக்கு வந்த எதிரகத்து அம்மாமியிடம் சொன்னேன் – தவறிப்போய்! அவ்வளவுதான், மத்தி யானம் ஊரெல்லாம் இதே பேச்சுத்தான். ஒவ்வொருவராக வீட்டுக்கு வர ஆரம்பித்துவிட்டார்கள். எங்கள் வீட்டிலிருந்து கிளம்பி அவர் களுடைய வீட்டுக்குப் போய் என்ன சொன்னார்களோ தெரியவில்லை. அந்தம்மாள் வந்துவிட்டாள்.

'யார் சொன்னார்கள், எங்கே சொன்னார்கள், எப்படி நான் தன் தங்கமான பிள்ளையைப் பற்றி இப்படி பழி சொல்லப் போச்சு' என்று லகலகவென்று பிடித்துக்கொண்டாள், அம்மா!

அவளைச் சமாதானம் செய்து வீட்டுக்கு அனுப்பப்பட்டபாடு தெய்வ மறிந்து போய்விட்டது. அவள் பெண் சொன்னாளாம். 'பிறத்தியார் வீட்டுப் பேச்சை எடுக்கிறவர்கள் நாக்கை ஏன் அறுக்கக்கூடாது, வெட்கம், மானம் இருந்தால் பேசமாட்டார்கள்' என்றெல்லாம் வாய்க்கு வந்த படி திட்டினாளாம் போனவர்களிடம். அதையும் அவர்கள்

என்னிடம் வந்து சொன்னார்கள். ஆனாலும் என்ன வம்பம்மா இந்த கிராமந்திரத்தில்!

காதல் என்றால் என்ன என்று என்னைக் கேட்கிறாய். எனக்குத் தெரியாது. என் காலத்தில் எல்லாம் அதெல்லாம் ஒன்றும் கிடையாது. எனக்குத்தான் கலியாணத்தின்போது பனிரெண்டு வயதாயிற்றே? உன் அத்திம்பேர், கலியாணத்தின்போதுதான் என்னைப் பார்த்தார். உனக்குத்தான் அப்பா கலியாணம் செய்யாமல் படிக்கவிட்டிருக்கிறார். இப்பொழுதுதான் பெண்கள் காலேஜில் படிப்பதென்பது சகஜமாகி இருக்கிறது – அப்பொழுதெல்லாம் ஐந்தாம் கிளாஸுக்குமேல் பள்ளிக் கூடத்திற்கு அனுப்பமாட்டார்கள். பத்து வருஷங்களுக்குள் இவ்வளவு மாறுதல்!

வயது வந்து கலியாணம் ஆகாமல் இருப்பவர்களுக்குத்தான் காதல் என்பது என்று தெரியவேண்டும். கலியாணம் ஆவதற்கு இப்பொழு தெல்லாம் அதுதான் காரணம்போல் இருக்கிறது. ஆனதும் அது போய் விடுமோ?

யாரோ பையன் பார்த்தான் என்று எழுதியிருக்கிறாயே, அது என்னடி ஜாக்கிரதையாக இரு! உன் தோழி லலிதா செய்தாளே என்று நீயும் யாரையாவது சந்தித்துக் காதல் கொண்டுவிடாதே. இப்பொழுது எல்லோரும் உன் தோழியைப் பழிக்கிற மாதிரி உன்னை எல்லோரும் பழிப்பார்கள். நீ காலேஜில் படிக்கிறாய் என்று சொன்னதற்கே இங்கே வம்பு வளர்கிறது. கலியாணம் ஆச்சோ, என்ன வயசு, என்றெல்லாம் வெட்கம் ஏற்படும்படி கேள்விகள் கேட்கிறார்கள்.

அம்மா, நீ கடிதம் எழுதினதும் போதும், நான் வாய் தவறி இங்கே பிரஸ்தாபித்ததும் போதும். என் மண்டையைப்போட்டு உருட்டு கிறார்கள். இன்னும் என்னென்னமோ ரகசியமெல்லாம் எனக்குத் தெரியுமாம், நான் மறைத்து வைத்துக் கொண்டு லேசாகக் கொஞ்சம் தான் சொல்லி இருக்கிறேனாம்!

கிழவர் வந்து உன் அத்திம்பேரிடம் என்ன சொன்னாரோ தெரிய வில்லை. இவர் உள்ளே வந்து குதிக்கிறார். 'கொண்டா கடிதத்தை இங்கே' என்கிறார். நான் எப்படிக் காட்டுகிறது? 'கிழித்துவிட்டேன்' என்றேன். அதிலிருந்து உன் அத்திம்பேருக்கும் எனக்கும் சண்டை.

நல்ல லலிதா வந்தாள்! ஆமாம், நீ எழுதியிருக்கிறதெல்லாம் நிஜமா? அவர்கள் வாஸ்தவமாகத் தனிக்குடித்தனமா செய்கிறார்கள்? நல்ல வேளை, அதை நான் இங்கே யாரிடமும் சொல்லவில்லை. சொல்லி இருந்தால் ஊரே இரண்டுபட்டுப் போயிருக்கும். உன் அத்திம்பேரும் என்னை உயிருடன் வைத்திருக்கமாட்டார்.

ஒரு வம்புக்கும் நான் போவதில்லை. சும்மா இருக்காமல் இதில் போய் மாட்டிக்கொண்டேன். எதிரகத்து அம்மாமி அடிக்கடி வருகிறவள்,

பழகினவள். அவளிடம் சொன்ன போது விஷயம் இவ்வளவு பெரிய விளைவாகும் என்று நான் நினைக்கவே இல்லை. நிமிஷத்தில் ஊர் முழுவதும் பரப்பிவிட்டாளே அவள்! 'அவள் இந்த வீட்டிலல் நுழைந்தால் காலை ஒடித்துவிடுவேன்' என்கிறார் உன் அத்திம்பேர்.

அவர்கள் வீட்டில் ஒரே அமர்க்களமாம்! அகமுடையானும் அகமுடையாளும் ஒருவரை ஒருவர் வாய்க்கு வந்தபடி எல்லாம் பேசிக் கொள்ளுகிறார்களாம்! பாவம், பிராமணன் வெளியில் கிளம்புவ தில்லை. அவளும் காவேரிக்கு வருவதை நிறத்திவிட்டாள்.

பொழுது போகாமல் துக்கம்கொண்டிருந்த கிராமத்தில் திடீரென்று பட்டணத்திலிருந்து வந்த உன் கடிதம் இப்படி ஒரு ரகளை செய்து விட்டது. என்ன ஆகுமோ தெரியவில்லை. நீ இனிமேல் ஒன்றும் எழுதாதே. வம்பர்கள் தபால்காரனை மறித்துக்கூட கடிதத்தை வாங்கிப் படித்துவிடுவார்கள்.

உன்,<br>
பத்மாஸனி

திருவெழுந்தூர்,<br>
*10–1–40.*

என் அருமை அண்ணாவுக்கு அநேக நமஸ்காரம். உபய க்ஷேமம்.

வெகு நாளைக்குப் பிறகு உன் கடிதம் கிடைத்தது. வீட்டில் ஒரே ரகளையாக இருக்கிறது. நான் என்னத்தை எழுதட்டும்.

நீ எதற்காக அண்ணா இந்த மாதிரி படித்த பெண்ணை பொறுக் கினாய்? அப்பா அம்மாமேலல் சீறிவிழுகிறார். படிப்புக்கு அவளாள் தான் இவ்வளவுக்கு வந்ததாம். உன்னை மேல் அனுப்ப அப்பாவுக்கு இஷ்டமே இல்லையாம். அம்மா தான் கட்டாயப்படுத்தினாளாம். மூன்றாம் வருஷம் நீ கிராப் பண்ணிக்கொண்டு இங்கே வந்தபொழுதே அப்பா அம்மாவை படாதபாடு படுத்தினார். நான் அப்பொழுது இங்கே இருந்தேனல்லவா?

ஊரெல்லாம் இதே பேச்சாகிவிட்டதண்ணா! நாங்கள் சொல்ல வில்லை. கோடியகத்துச் சாமா அகமுடையாள் பத்மாஸனி – பட்டணம் வக்கீல் முத்துஸாமி அய்யர் பெண் – அவள் தங்கையாமே சுலோசனா? அவள் உங்கள் காலேஜில் படிக்கிறாளாம். அவளுக்கு நீ சம்பாதித் திருக்கிற பெண்ணும் தோழிகளாம். அவள் இங்கே அக்காவுக்குக் கடிதாசி எழுதியிருக்கிறாள். நீ இந்த ஊர் என்று அவளுக்குத் தெரியாது. அவள் பாட்டிற்கு இப்படி ஒன்று நடந்திருக்கிறது என்று விஸ்தாரமாக எழுதி இருக்கிறாள். பத்மாஸனிக்குத் தெரியும் நீதான் என்று. இவள் விதைத்து விட்டாள் ஊர் முழுவதும்.

அப்பாவையும் அம்மாவையும் எல்லோரும் துக்கம் விசாரிப்பது போல வந்து கேட்கிறார்கள். அவர்கள் என்ன சொல்லுவார்கள்?

நேற்று ராஜா கனபாடிகள் வந்திருந்தார்.

'சாஸ்திரிகளே நான் என்னமோ கேள்விப்பட்டேனே என்ன சமாச்சாரம்?' என்றார்.

'ஒன்றும் தெரியவில்லை' என்று அப்பா பாவம் மழுப்பினார்.

'ஊரெல்லாம் அமளிப்படுகிறதே, உங்க பிள்ளையாண்டான் எழுதவில்லையா?' என்று அவர் கேட்டார்.

'பிள்ளை ஏதோ மொத்தமாக எழுதியிருக்கிறான். விவரம் ஒன்றும் தெரியவில்லையா?' என்று அப்பா மறுபடியும்.

'தெரியவில்லை என்றால் வெறுமனே இருக்கிறதா? இந்த க்ஷணம் நீர் புறப்பட்டு போய் பிள்ளையாண்டானைக்காபந்து பண்ணிக் கூட்டிக் கொண்டு வரவேண்டாமோ? அப்புறம் காரியம் மிஞ்சிப் போய்விட்டால் பிரமாதமாகி விடாதோ? நம் ஊரில் இந்த மாதிரி– அதுவும், உங்கள் குடுபத்தில்–இப்படி அனுசாரமாக ஒரு அசந்தர்ப்பம் நடந்துவிட்டால் என்ன செய்கிறது? நாளைக்கு அந்தப் பெண் இங்கே குடித்தனம் செய்கிறதா?' என்று அவர் பாட்டிற்கு ஆரம்பித்து விட்டார்.

அப்பா வாயே திறக்கவில்லை.

மத்தியானம் எதிரகத்து விசாலாட்சி அம்மாமி வந்தாள்.

'ஏண்டி மீனா, இதென்னடி கேலிக்கூத்து! உம்புள்ளே யாரோ குசினிக் காரச்சியை கல்யாணம் பண்ணினூட்டானாமே? உனக்குத் தெரியாமலா செஞ்சினூட்டான்? அவதேவடியா மாதிரி இருக்கிறாளாம். அவனோடே நாற்காலியிலே உட்கார்ந்து பேசிண்டிருக்காளாமே, சாயந்திரம் என்னமோ பீச்சாமே அங்கேபோய் கைகோத்துண்டு உலாத்தறாளாம். போரும், ஒரு புள்ளையெ பெத்து வளத்ததுக்கு ஒனக்கு நல்ல மாட்டுப்பொண் வந்திருக்கா!'

இந்த மாதிரி பேசினால் என்ன பதில் சொல்லுகிறது அண்ணா?

அப்பா அம்மா வெளியே போகிறதில்லை.

என்கிட்ட யாராவது வந்தால் முகத்தில் அடித்தாற்போல் ஏதாவது சொல்லிவிடுவேன்; யாரும் வருகிறதில்லை. இதே விசாலாட்சி அம்மாமி மாட்டுப்பெண் போனவருஷம் ஓடிப்போயிருந்து ராத்திரியோட ராத்திரி போய் கூட்டிக் கொண்டு வந்தார்கள். அதை யார் சொல்லுகிறது.

அது கிடக்கிறது அண்ணா, என் மதனிக்கு என்ன வயது? எப்படி இருக்கிறாள்? அழகாக இருக்கிறாளா? என்ன படிக்கிறாள்? கேட்கிறேன் என்று கோபித்துக்கொள்ளாதே, நம்ம ஜாதிதானே? குலம் கோத்திரம் ஏதாவது தெரியுமோ?

கலியாணம் பண்ணிக்கொள்ளவே மாட்டேனென்றாய்? கடைசியில்

இப்படிப்போய் மாட்டிக் கொண்டுவிட்டாயே? நீ கலியாணம் செய்து கொள்ளப்போகிறாய் என்றால் நான் சந்தோஷப் படவேண்டும். நீ ஒன்றும் பிசகாகவோ யோசனை இல்லாமலோ செய்ய மாட்டாய் என்று எனக்குத் தெரியும்.

இங்கே இவர்கள் பிதற்றுவதைப் பற்றியெல்லாம் எனக்குக் கவலை யில்லை, நீ சந்தோஷமாக இருந்தால் போதும். நீ சந்தோஷமாக இருப்பாயா? அதை எழுது எனக்கு.

என் மதனியைப் பார்க்கவேண்டும் என்று துடிக்கிறது என் மனது. என்னைப் பற்றி அவளிடம் சொல்லியிருக்கிறாயா? அவள் என்னைப் பார்க்க ஆசைப்படுகிறாளா?

ஆமாம். கலியாணமாகி விட்டதா? நம் ரீதிப்படி கலியாணம் உண்டா அல்லது மோதிரம் மாற்றிக்கொள்வது என்கிறார்களே, அது மாதிரிதானா?

அண்ணா, எனக்கு ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறது. நீயா, –வெகு பயந்தவனாயிற்றே–நீயா இப்படி நம் குலத்திலே இதுவரை யாரும் செய்யாத காரியத்தைச் செய்யத் துணிந்தாய்! நீயாகவா துணிந்தாய்? யாராவது தூண்டிவிட்டார்களோ?

அப்பா அம்மா சும்மா இருந்தாலும் ஊரார்கள் விடமாட்டார்கள் போல் இருக்கிறது. ஒருவேளை அப்பா அங்கே வருவாரோ என்னவோ?

வந்தால் நீ என்ன செய்வாய்?

நான் சௌக்கியமாக இருக்கிறேன். குழந்தை இப்பொழுதுதான் முகத்தைப் பார்த்துச் சிரிக்கிறான். உன்னைப் போல இருக்கிறான் அண்ணா!

உன் அன்பான தங்கை,
காமு

இதை எழுதின பிறகு வீட்டில் அமர்க்களம். அம்மா, அப்பாவை உடனே பட்டணத்துக்குக் கிளம்ப வேண்டும் என்கிறாள். அப்பா 'நான் போய் என்ன பண்ணுகிறது மரியாதை கெடவேண்டியதுதான். இனிமேல் அவன் நான் சொல்லுகிறபடி கேட்பானா? கேட்பவனாயிருந்தால் இப்படி நம்மைக் கலக்காமல் செய்வானா? அவ்வளவுதான் பிள்ளை இல்லை என்று வைத்துக்கொள்' என்றார்.

அவ்வளவுதான், அம்மா ஒப்பாரி வைக்க ஆரம்பித்து விட்டாள். என்னிக்கும் அப்பாவுக்கு உன்னைக் கண்டால் ஆகாதாம். எக்கேடு கெட்டுப் போகட்டும் என்று விட்டு விட்டராம். அதனால்தான் பிள்ளை மனது விட்டுப்போய் ஜாதிவிட்டு ஜாதிபோய் கலியாணம் செய்து கொள்ளத் துணிந்துவிட்டானாம். வாய்க்கு வந்ததையெல்லாம் பேசுகிறாள்.

எனக்குத் தாங்கவில்லை. அம்மாவைக் கோபித்துக் கொண்டேன்.

'தெரியுமே எனக்கு. நீ உன் அப்பா பக்கம் தான் பேசுவாய். என் பக்கம் பேச யார் இருக்கா? நான் யாருக்கு லட்சியம்? உசிரு போகமாட்டேங் கிறது. இந்த இருமல்தான் வந்திருக்கே. நான் தொலையப்படாதோ?' என்றாள்.

அப்பாவும் அம்மாவும் பேசுகிறதில்லை. ஊரார் தொல்லையோ சொல்லி முடியாது. நான் வந்து இங்கே அகப்பட்டுக் கொண்டேன். என்ன செய்கிறது என்று தெரியவில்லை.

இப்படியெல்லாம் எழுதியிருக்கிறேன் என்று நீ வருத்தப் படாதே, அண்ணா! பெண் உனக்குப் பிடித்திருந்தால் சரி. அதுதான் முக்கியம்.

அப்பா இன்றோ, நாளைக்கோ பட்டணத்துக்குப் புறப்படாவிட்டால் அம்மா விடமாட்டாள்–அதாவது ஊரார் விடமாட்டார்கள்.

இந்தக் கடிதத்தை மதனிக்குக் காட்டாதே.

அன்புள்ள,

*காமு*

திருவல்லிக்கேணி, சென்னை.
*12–1–40*

என் அருமைக் காமுவுக்கு அநேக ஆசீர்வாதம். உன் கடிதம் கிடைத்தது. லலிதாவும் படித்தாள். நம் கிராமங்களே இப்பொழுது வம்பும் வழக்கும் செய்துகொண்டுதான் ஜீவிக்கின்றன. வேறென்ன வேலை இருக்கிறது அங்கே? ஆகையால் என்னைப் பற்றி தாறுமாறாகப் பேசுகிறார்கள் என்பதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. லீவில் ஊருக்கு வந்து அப்பா அம்மாவிடம் விஷயத்தை விவரமாகச் சொல்லி பிறகு கலியாணம் ஏற்பாடு செய்யலாம் என்றுதான் சும்மா இருந்தேன். சங்கதி அங்கே எட்டிவிட்டது வருந்த வேண்டிய விஷயம். ஜனங்கள் ஏன் பிறர் விஷயங் களில் தலையிடாமல் இருக்கமாட்டேன் என்கிறார்கள்? யார் எப்படிப் போனால் அவர்களுக்கென்ன? நம்முடைய சுக துக்கத்திற்கு அவர்களா பிணைக்கப்படுகிறார்கள்? சுலோசனா அசட்டுப் பெண். இங்கே நடந்ததை தன் சகோதரிக்கு எழுதாவிட்டால் தலை வெடித்துவிடுமா? யாரை என்ன சொல்லுகிறது. நடக்கிறது நடக்கட்டும்.

லலிதாவோ நானோ அதையெல்லாம் பற்றி ஒன்றும் கவலைப்பட வில்லை. அப்பா அம்மாவும், நீயும் திருப்தி அடைந்தால் போதும். உன் சுபாவம் எனக்குத் தெரியும். நீ சந்தோஷப்படுவாய்; அப்பா ஒரு மாதிரி. அம்மா தான் சங்கடப்படுத்துவாள். ஆனால் எவ்வளவு நாள்? எப்பேர்ப்பட்ட புரட்சியும் சமூகத்தையும், தனி மனிதர்களையும் கொஞ்ச காலத்துக்குத்தான் உணர்ச்சி வசப்படுத்தும். பிறகு எல்லாம்

சரியாகப் போய்விடும். நடக்கிற வரையிலும், நடந்து முடிகிற வரையிலும்தான் கிளர்ச்சியும் கூக்குரலும். பிறகு எல்லாம் அடங்கிவிடும். வயதுவந்து கலியாணம் செய்யவேண்டுமென்று சட்டசபையில் நிறைவேறின சட்டத்திற்கு எவ்வளவு ஆட்சேபனை, சமாதானங்கள் நடந்தன? சனாதனிகள் உயிரைவிட்டு அதைத் தடுப்பதாகக் குதித்தார்கள்? என்ன ஆயிற்று? பார்க்கப்போனால் அந்தச் சட்டம் விரும்பினதேதானே இப்பொழுது நமது சமூகத்தில் இருக்கிறது. கலியாணமாகாத பெண்கள் இப்பொழுது பனிரெண்டு வயதிற்கு மேற்பட்டவர்கள் எவ்வளவு பேர் இருக்கிறார்கள் என்று நினைக்கிறாய்? நம் கிராமத்திலேயே கலியாணமாகாத சுமார் பத்து பெண்களில், ஏழுக்குமேல் வயதுவந்தவர்கள் என்பது என் ஞாபகம்.

ஆகையால் சமூகக் கூச்சலுக்கு நீ பயப்படாதே. அது பாட்டிற்கு பொறுப்பில்லாததால் எதை வேண்டுமானாலும் சொல்லும். அதை அடக்கவும் முடியாது, கண்டிக்கவும் முடியாது. பயந்தால், கல்லெடுத்து அடித்துக்கொன்று விடும்; எதிர்த்து நின்றால் சும்மா இருந்துவிடும். சமூகம் என்பது கோழை; தனி மனித பலம் இல்லாமல் கூட்டத்தை நம்பி இருப்பதால் அது சுத்த பயந்தாங்கொள்ளி; அல்பத் தனமும், பொறாமையும், பிறர் துக்கத்தைக்கண்டு மகிழ்ச்சி கொள்ளும் போக்கும் கொண்டது. வெளிக்கு தர்மத்தையும், சத்தியத்தையும் பற்றிப் பேசும். சுயநலம் என்பதுதான் அதன் தர்மம்; கற்பனை செய்வது என்பதுதான் அதன் சத்தியம்.

அது கிடக்கிறது. நீ ஏதோ எழுதினதால் இவ்வளவு பிரசங்கம் செய்துவிட்டேன். நீ புத்திசாலி. லலிதா உன்னைப் பார்க்க வேண்டுமென்று ஆசைப்படுகிறாள். உன் குழந்தைக்கு ஒரு வெள்ளி கிலுகிலுப்பை வாங்கி அனுப்புகிறாள். அவள் ஒன்றும் பிரகிருதி அல்ல; உன்னைப் போலத் தான். படித்த பெண் என்றே சொல்லமுடியாது. அழகாய் இருக்கிறாளா என்று கேட்கிறாய். நான் என்ன எழுதட்டும், காமு? நீயே பார்த்துக்கொள். நான் அவளிடம் ஒன்றும் அகப்பட்டுக்கொண்டு விடவில்லை. லலிதா உன் கடிதத்தைப் பார்த்துவிட்டுச் சிரித்தாள். தானே உனக்கு எழுதுவதாகச் சொன்னாள்.

அப்பா இப்பொழுது வரவேண்டிய தேவை இல்லை. அவர்களுக்கு இதை வாசித்துக் காட்டிச் சொல்லு. நான் அவசரப்பட்டு எதையும் செய்கிறவன் அல்ல; லலிதாவும் முன் யோசனை அற்றவளல்ல. பரீட்சையானதும் இருவருமே அங்கே வருவதாக நினைக்கிறோம். லலிதாவும் இரண்டு வரி எழுதுகிறாளாம்.

உன் அன்புள்ள,
சந்திரசேகரன்

பிரியமுள்ள காமுவுக்கு,
உன்னுடன் பழக்கமில்லாமலே நான் இப்படி எழுதுகிறேனே என்று யோசிக்கவேண்டாம். உங்கள் அண்ணா சொன்னதிலிருந்தே உன்னுடன் எனக்குப் பழக்கமாகி விட்டது. நீதான் என்னுடன் இனிமேல் பழக வேண்டும். அதற்குத் தான் இந்தக் கடிதம்.

உங்கள் அண்ணா எழுதியிருப்பதைப் பற்றியெல்லாம் நான் எழுதப் போவதில்லை. அவசியமும் இல்லை.

உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன்.

நான் படித்த பெண்ணாக இருப்பது உனக்கு ஆட்சேபணை இல்லையே? இல்லையென்றால் போதும், அவ்வளவுதான்.

மற்றபடி நான் எல்லாப் பெண்களைப்போலத்தான். வெள்ளைக் காரச்சி அல்ல, குசினிக்காரச்சியுமல்ல. உங்கள் அண்ணாவை மயக்கி விட்ட மோகினியுமல்ல. உங்கள் அண்ணா அண்ணாதான். அவர் மாறவில்லை.

உங்கள் அண்ணாவிடம் உனக்கிருக்கும் பிரியம் உன்னையும் என் பிரிய சகியாக்கிவிட்டது.

காமு, உன்னைப் பார்க்கவேணும்போல் இருக்கிறது. உன் குழந்தை– அந்தப் பயலை ஒரு அத்தை கட்டி முத்தமிடத் துடிக்கிறாள்.

காமு, நிஜமாகச் சொல், நீ என்னை வெறுக்கிறாயா?

உன் அண்ணாவைப் போன்றவர்கள் சாதாரணமாகத் தென்படுவது கஷ்டம். இதென்ன, அவரைப்பற்றி உனக்கு நான் எதற்கு எழுதுகிறேன். உனக்குத் தெரியாதா?

ஆகையால் அவரை நீ இன்னும் பழைய அண்ணாவாகவே நினைத்து இதைப்பற்றி யோசிக்கலாம்.

உன்,
லலிதா

தஞ்சாவூர்,
12–1–40

ஆத்மநாதன், பி.ஏ.பி.எல்.,
அட்வகேட்.
அன்பார்ந்த லலிதா,
உன் கடிதத்தைப் படித்ததும், எனக்கு ஒரே மூச்சில் திகைப்பும் சந்தோஷமும் ஏற்பட்டன. நீ படித்த பெண்தான்! ஆனால் நீயே உன் புருஷனைத் தேடிக்கொள்வாய் என்று நான் நினைக்கவில்லை. ஆனால் எனக்கு அந்த விஷயத்தில் ஒரு சிரமமும் கொடுக்காமல் நீயே முடிவு

செய்ததைக் கண்டு சந்தோஷப்படுகிறேன்.

பையன் யார்? உன் வகுப்பில் படிப்பவனா? எந்த ஊர்? சொத்து சுதந்திரம் உண்டா? தாய் தந்தைகள் இருக்கிறார்களா? அவர்களுக்குச் சம்மதமா? உன் மதனி இங்கே இல்லை. அம்மாவும் சித்தியும்தான் பாடுபடுத்துகிறார்கள்.

அவர்களுடைய இஷ்டத்துக்கு முற்றிலும் விரோதமாகத்தானே நான் உன்னைக் காலேஜில் படிக்கவைத்தேன்?

'எனக்கு அப்பவே தெரியுமே, இந்தமாதிரி ஆகும்னு!' என்கிறாள் சித்தி.

'பெரியவா பேச்சை யார் கேட்கிறார்கள்? என்னிக்கு அவள் பட்டணத்துக்குப் புறப்பட்டாளோ அன்னிக்கே எனக்கு ஒரு பொண் பொறக்கலேன்னு நிம்மதி பண்ணிக் கொண்டு விட்டேன்' என்கிறாள் அம்மா.

அவர்கள் சொல்லிக் கொண்டே இருக்கட்டும். நீ மட்டும் ஜாக்கிரதை யாக இருக்க வேண்டும். நான் வருகிற வரையில் நீ ஒன்றும் வார்த்தை கொடுத்து விடாதே! அவன் ஜாதகைக்கே நீயும் போய்விட்டதாக எழுதி யிருக்கிறாய். அது எனக்கு அவ்வளவு இஷ்டமில்லை. சரி. 15–1–40 காலை நான் அங்கே வருகிறேன்.

பையன் திருவெழுந்தவூர் என்று எழுதியிருக்கிறாய்; அப்படியானால் நல்ல யோக்கியமான குடும்பம் என்பதில் சந்தேகமில்லை. நம் குடும்பத்தில் சம்பந்தபட அவர்கள் ஒன்றும் தயங்க வேண்டியதில்லை. பையன் கேட்டால் சொல்லு. நாம் பாரத்வாஜ கோத்ரம். நமது பரம்பரை யும் பெரிய பரம்பரை. தாத்தா தஞ்சாவூர் மகாராஜாவின் சமஸ்தானத்தில் இருந்தவர். நல்ல லௌகீக அந்தஸ்து உடையவர். அம்மா பக்கமும் வலுத்த கை. கணபதி அக்ரஹாரம் கணபதி சாஸ்திரிகள் என்றால் போன தலைமுறையில் எல்லோருக்கும் தெரியும்.

ஆனால் இதெல்லாம் எதற்கு? ஒருவேளை பையனுடைய பெற்றோர்கள் குலம், கோத்திரம் விசாரித்தால் தெரிந்திருக்கட்டும் என்று எழுதியிருக்கிறேன்.

பரீட்சைக்கு நன்றாய்ப் படி. நான் செக் அனுப்பி இரண்டு மாதங்கள் ஆகிவிட்டனவே, நீ ஏன் இன்னும் பணம் கேட்கவில்லை? போதுமா? கையில் இருக்கிறதா? இருந்தாலும் இத்துடன் ரூ. 200க்கு செக் வைத் திருக்கிறேன். ஊருக்கு வரும் வரையில் போதும். மறந்துவிட்டேனே! நானேதான் வருகிறேனே! மற்றது நேரில்.

உன் அன்புள்ள தமையன்,

ஆத்மநாதன்

உன் மதனிக்கு இரண்டு மாதமாக இருமாலாக இருந்து இப்பொழுது பிறந்தகம் போயிருக்கிறாள். குமாரும், சரோஜாவும் இங்கே தான் இருக்கிறார்கள்.

திருவல்லிக்கேணி,
சென்னை.
*12–1–40.*

அன்பார்ந்த அண்ணாவுக்கு,
உன் கடிதத்தைக் கண்டதும்தான் எனக்கு நிம்மதி ஏற்பட்டது. திடீரென்று நானும் – அவரும்கூட – எதிர்பாராத இந்த நட்பைப் பற்றி நீ என்ன நினைப்பாயோ என்று எனக்குப் பயமாக இருந்தது. நான் ஏமாந்து விட்டேன் என்றோ க்ஷண சித்தத்தில் மதி மயங்கிவிட்டேன் என்றோ நீ நினைத்துவிடக் கூடாது என்பது தான் என் கவலை.

உன்னுடைய விசால புத்தி யாருக்கு இருக்கும் அண்ணா? எல்லா வற்றையும் உன்னால் ஊகிக்க முடிகிறது, எல்லாவற்றையும் அறிகிறாய்.

நானே இந்த விஷயத்தில் ஒரு முடிவிற்கு வந்துவிட்டதைப் பற்றித் தான் நீ ஆச்சரியப்படுகிறாய். எனக்கேதான் ஆச்சரியமாக இருக்கிறது என்று நான் சொன்னால் நீ நம்புவாயா? ஆனால் அது தான் முழு உண்மை. உள்ளத்தின் போக்கு இவ்வளவு விபரீதமானது என்று இப்பொழுது தான் நான் உணர்கிறேன். கதைகளில் படித்தபொழுது தெல்லாம் வெறும் ஏமாற்றம் என்றும் பலவீனமென்றும் தான் எண்ணினேன். கதைகளில் இருப்பது சதாம்சத்தில் ஒன்றுதான் என்பது இப்பொழுது தெரிகிறது.

அவரைப் பார்த்தால் இந்த மாதிரி உணர்ச்சியைப் பிரயத்தனமாகக் கிளப்பக் கூடியவர் என்பதே தென்படாது – அதுதான் வேடிக்கை! என்னைப்பற்றி உனக்குத் தெரியும். நவீனப் பெண்களின் போக்குக்கும், என்போக்குக்கும் எவ்வளவு தூரம் என்பது நீ அறிந்தது. காலேஜில் படிக்கிறேன், சற்று நவீன முறையில் உடை உடுக்கிறேன் என்பதைத் தவிர மற்ற விஷயங்களில் நான் சுத்த கர்நாடகம் அல்லவா? தைரியமாக எதையும் செய்யமாட்டேன், சொல்லமாட்டேன். காலேஜிலேயே எனக்குப் பேசாமடந்தை என்று பெயர்–நான்–!

ஹாஸ்டலைவிட்டு வெளி வந்து அவருடன் தனியாக இருப்பதற்கு எனக்குக் கொஞ்சம் யோசனைதான். ஆனால் அவரை நான் நம்பவில்லை என்று அவர் மனம் புண்படக் கூடாது என்றே அந்தக் காரியத்தைச் செய்தேன். அது சற்று அதிகப்படியாக உனக்குத்தோன்றும். ஆனால் அவர் அந்த யோசனை சொன்ன பிறகு மறுதளிக்க என்னால் முடிய

வில்லை. காலேஜிலேயே இதனால் ஒரு பெரிய வம்பு வளர்ந்து விட்டது. அதை அவர் சாமாளித்த வகைதான் என்னைக் கூடப் பிரமிக்கச் செய்துவிட்டது. இப்பொழுது அவரைக் கண்டாலே எல்லோருக்கும் பயம்! – பெண்கள் முதல். ஆசிரியர்களே விஷயத்தைக் கேள்விப்பட்டு வாயை மூடிக் கொண்டு இருந்து விட்டார்கள். அவரிடம் அவர்களுக்கு அவ்வளவு மதிப்பு, நம்பிக்கை. நேர்மையைத் தவிர அவருக்கு வேறொன்றும் தெரியாது, அண்ணா! அந்த மாதிரி நீ யாரையாவது பார்த்திருக்கிறாயா?

இப்படியெல்லாம் எழுதுகிறேனே என்று பார்க்கிறாயா? இனிமேல் எழுதவில்லை. நீயே நேரில் பார்ப்பாய். உன்னை சந்திக்க வேண்டு மென்று துடித்துக் கொண்டு இருக்கிறார்.

குமாரையும் சரோஜாவையும் கூட்டிக்கொண்டு வாயேன்–முகமே மறந்துபோய்விட்டது. ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்! என்னைப் பற்றி நினைக்கிறார்களா?

அண்ணா நான் சந்தோஷமாக இருக்கிறேன். அது தானே நீ கோருவது? எனக்கு ஒரு பச்சாதாபமும் இல்லை, மனக்குறையும் இல்லை. சரிதானே?

நீ வெட்கப்படும்படி நான் ஒன்றும் செய்யமாட்டேன் என்பது உனக்குத் தெரியுமல்லவா? நீ கவலைப்படவேண்டாம்.

எனக்குப் பணம் எதற்கு அனுப்பினாய்? அனுப்பினதே இருக்கிறது. இப்பொழுது எல்லா செலவுகளும் அவர்தான் செய்கிறார்; நான் ஆட்சேபிக்க முடியவில்லை.

உன் அன்புள்ள,
லலிதா

திருவெழுந்தூர்,
தை மீ 2 தேதி.

க்ஷேமம்.

மகா–ள–ள–ஸ்ரீ சின்னையா சந்துரு அய்யாவுக்கு பண்ணை சாமித்துரை வணக்கமாகத் தெரிவித்துக் கொள்ளுவது என்னவென்றால், இப்பவும் சங்கதி கேட்டு நானும் அவளும் சரியா சாப்பிடல்லே தூங்கலே. நான் தோளிலே போட்டு வளத்த புள்ளெ நீ. ஆகையினாலே எழுதறேன். 'என் சந்துருவா தாய் தோப்பனைக் கேக்காமே கொள்ளாமெ இப்படிக் கண்ணாலம் பண்ணிக்கிட்டான்'னு அவ நினைச்சி நினைச்சி கலங்கறா.

அய்யாவும் அம்மாவும் என்ன பண்ணுவாங்க? நீ இந்த மாதிரி துரோகம் பண்ணலாமா? நானும் உங்க குடும்பத்துலே எங்கப்பன் நாளுமுத இருக்கேன். இந்தமாதிரி நடந்ததில்லே. ஊர்விட்டு உறவு

முறையார் விட்டு கண் காணாத சீமையிலே போயி நீ பொண் கட்டிக்கிட்டா அது நாளக்கி இங்கே வர வாணாமா?

நம்ம குடும்பமென்ன, காரியமென்ன; நீ யாரையோ வெள்ளக்காரச்சியையா கட்டிக்கிறது? நம்ம ஜாதிக்கு அடுக்குமா? உரிலே நாளக்கி ஒரு நல்லகாரியம், பொல்லாத காரியம், யார் வருவாங்க? இப்பவே ஊர்லே நம்ம ஊட்டெ விலக்கணுமுனு பேசிக்கிராவ.

வயசு காலத்துலே அய்யாவுக்கு இந்த மாதிரி உபத்திரியம் நீ கொண்டாரலாமா?

கண்ணாலம் பண்ணிக்கணுமினா நம்ம ஊர்லெ பொண் இல்லியா? ஆயிரம் பேர் நான் தாரேன், நீ தாரேன்னு வருவாவளே? உனக்குப் பொண்ணுக்குத்தானா பஞ்சம்? எட்டுப் பொண்ணு கட்டிக்கலாமே.

நான் கிளவன் சொல்ரத்தெக் கேளு. கிளவி எளுதச் சொல்லி எளுதரேன். வாயை மூடிக்கிட்டு சொல்லாமெ ஓடியாந்துரு. படிப்பும் வாணாம் பட்டணமும் வாணாம். படிச்சு என்ன ஆவணும், நெலத்தெச் சுத்திப்பாத்துகிட்டு நீ பாட்டுக்கு இரு. அப்பவே சொன்னே அய்யா கிட்டெ. கேக்கல்லே. 'ஏஞ்சாமி காசைக் கொண்டு கொட்டரீங்க. நாலுமா நெலம் வாங்கினாலும் உண்டு'ன்னேன். இப்ப என்ன பண்ரது. போனது போவட்டும். இருக்கிறது ஒனக்குப் போதும். ராசாமாதிரி இருக்கலாம், வூட்லே மாடுங் கண்ணுமா.

கிளவி என்னெ வந்து கூட்டிக்கிட்டு வரச்சொல்ரா. பட்டணத்துலே எனக்கு ஊர் தெரியுமா பேர் தெரியுமா? எங்கேயாச்சியும் ரயில் மோடர்கா மேலே ஏறி வச்சுதுன்னா அது வேறே சங்கடம்.

இந்தக் கடுதாசியெப் பார்த்ததும் நீ புறப்பட்டு வந்துடவேண்டியது.

அருமாந்தக் கொளந்தெயெ பாவி எவளோ மயக்கிப் பிட்டாளேன்னு கிளவி ராவும் பவலுமா கதறிக்கிட்டுக் கிடக்கா. உனக்கு இரக்கம் இல்லியா. நாங்க நாலு பேர் கிளங்க. நாளக்கி சாவப் போரம். எங்க மனசைப் புண்படுத்தாதே.

இப்படிக்கு,
கீறல் சாமித்துரை

சென்னைப் பட்டணம்,
*12–1–'40.*

சாமித்துரைக்கு,

உன் கடிதத்தைப் படித்ததும் எனக்குக் கண்களில் ஜலம் வந்துவிட்டது. உனக்கு என்மேல் இவ்வளவு அபிமானமா? உன்னைப்போன்ற மனிதர்கள் இருந்தால் உலகம் இன்னும் இன்பம்தான் சாமித்துரை!

நீ ஒன்றும் கவலைப் படாதே. உன் பெண்சாதியிடமும் சொல்லு. நான் தப்பாக ஒரு காரியம் செய்வேனோ? நீ கேள்விப்பட்டதெல்லாம் சுத்த புரளி, பொய்!

நான் இன்னும் யாரையும் கலியாணம் செய்துகொள்ளவில்லை. காலேஜில் என்னுடன் படிக்கும் ஒரு உயர்குலத்துப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்ளலாம் என்று தீர்மானித்திருக்கிறேன். அவ்வளவுதான். அப்பா அம்மாவுக்குத் தெரியாமல் கலியாணம் செய்து கொண்டு விடுவேனா?

நான் அவளைக் கலியாணம் செய்து கொள்வதால் நமக்கு யாதொரு தாழ்வும் இல்லை. அவளும் நமக்கு சரி சமமான அந்தஸ்துடையவள். நமக்குப் பெருமையைத் தவிர வேறொன்றும் ஏற்படாது. நீ ஒரு தரம் அவளைப் பார்த்தால் பிறகு இப்படி நினைக்க மாட்டாய், எனக்குத் தெரியும்.

நீ பார்த்துச் சம்மதம் கொடுத்த பிறகு கலியாணம் செய்து கொள்ளு கிறேன், அவ்வளவுதானே?

நான் உலகம் அறியாத பையன், ஏமாந்து போய்விட்டேன் என்று நினைக்காதே! நான் ஏமாற மாட்டேன். அவளும் ஏமாற்றுகிற தன்மை யுடையவள் அல்ல. ஆனால் இப்பொழுது ஏன் அதையெல்லாம் எழுத வேண்டும். உன் சுபாவம் எனக்குத் தெரியும். நான் எழுதினது ஒன்றை யும் நீ நம்ப மாட்டாய். நான் தெரியாத்தனத்தால் எழுதி இருக்கிறேன் என்றுதான் நினைப்பாய். நேரில் பார்த்த பிறகு தான் நீ ஒப்புக்கொள்வாய்.

உன்,

சந்துரு

## 3

திருவெழுந்தூர் ராமஸ்வாமி சாஸ்திரிகள் மாயவரம் ஸ்டேஷனில் திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் ஏறினார்.

ஏறி உட்கார்ந்த பிறகு, கையிலிருந்த டிக்கெட்டை மேல் வேஷ்டி யின் கோடியில் முடிந்து இடுப்பில் செருகிக் கொண்டார். மடிஸஞ்சியை மடியில் வைத்துக் கொண்டே இடுப்பிலிருந்து விபூதி சம்புடத்தை எடுத்து சிறிது சில்லரையை அதில் போட்டுவிட்டுக் கொஞ்சம் விபூதியை எடுத்து நெற்றியில் பூசிக்கொண்டு, சம்புடத்தை மூடி இடுப்பில் செருகிக் கொண்டார்.

அவருக்கு வயது அறுபது; பார்ப்பதற்கு ஐம்பது என்றுதான் தோன்றும். பளிச்சென்று வெண்மையான பத்தாறு வேஷ்டியைப் பஞ்சகச்சமாகச் கட்டி அங்க வஸ்திரத்தைப் போர்த்துக்கொண்டிருந்தார்.

'சாக்கிரதையாப் போயி எறங்குங்க. சின்னய்யாவைக் கையோட கூட்டிகிட்டு வந்திடுங்க. பரிச்சையெல்லாம் பார்த்துக்கலாம்' என்று ரயில் புறப்பட்டதும் சாமித்துறை பிளாட்பாரத்திலிருந்து கத்தினான்.

'சரி, இப்பவே ஊருக்குப் போ. வீட்டுலே படுத்துக்கோ!' என்று சாஸ்திரிகளும் இரைந்தார்.

வண்டியில் யாராரோ கூட்டம். சாஸ்திரிகள் ஒருதரம் எல்லோரையும் சுற்றிப்பார்த்தார். பிறகு கண்களை மூடிக் கொண்டு யோசனையில் ஆழ்ந்தார்.

என்ன காலம்! அவர் திருவையாறு ராமசுப்பா சாஸ்திரிகளிடம் அத்தியயனம் செய்துவிட்டு ஊருக்கு வந்த பொழுது அவருக்கு வயது இருபது. திருவாலங்காடு சுப்பிரமணிய வாத்தியார் பெண் மீனாட்சிக்கு வயது பத்து. பெரியோர்கள் ஜாதகம் பார்த்தார்கள். பொருத்தமாக இருந்தது. கலியாணம் நடந்தது. சாந்தி முகூர்த்தத்துக்கு முன் அவர் மனைவியுடன் பேசி அறியார். கலியாணமான ஐந்து வருஷங்களுக்குப் பிறகு மனைவி வீட்டுக்கு வந்தாள். வந்ததும் முன் நின்று பேசினதுண்டா? அவருடைய தாயார் தான் 'அடி மீனாட்சி, அவனுக்கு சந்தியாவந்தனத் துக்கு விபூதியும் ஜலமும் கொண்டு வை!' 'அவனுக்கு இலை போட்டுப் பரிமாறு!' என்பாள். அவர் முப்பத்தைந்தாம் வயது வரையில் தாராளமாக மனைவியை பிறர் முன் கூப்பிட்டதுகூட இல்லை. மாமியார் காலமான பிறகு தான் குழந்தைகள் பிறந்தபிறகுதான், மீனாட்சி அம்மாள் புருஷன் முன்பு நின்று பேசுவாள். இப்பொழுதுதான் வயதான பிறகு, கொஞ்சம் முனகுகிறாள், பேசுகிறாள். அவருக்கென்ன குறைந்துவிட்டது! இப்பொழுது என்னடா என்றால்...!

சிதம்பரத்தில் வண்டி நின்றதும் அவர் கண் திறந்து பார்த்தார். ஒரு இளைஞனும் அவன் மனைவியும் வந்து அந்த வண்டியில் ஏறினார்கள். ஏறினதுதான் தாமதம் பெண் பேச ஆரம்பித்துவிட்டாள்.

'இன்னும் வண்டிக்கு நாழியிருக்கே? இந்த வண்டியில் ஏன் ஏறினேள்? இதில் இடமே காணமே? எல்லாம் அவரசம்தான் உங்களுக்கு. கூஜா எங்கே? அதோ பூ போறது–கூப்பிட்டு வாங்குங்கோ? ஆனந்தவிகடன் ஒண்ணு வாங்குங்கோ!–வாண்டாம் படிச்சூட்டேன்– புதிசு நாளைக்குத்தானே வரும். அம்மா வெற்றிலைத் தட்டில் வைத்த ரவிக்கையை பொட்டீலே வச்சேனா? தேங்காயை வச்சூட்டு வந்தூட் டேன். நீங்க படுத்தின அவசரம்....ஒரு மொழமா காலணா? நன்னாருக்கு, ரெண்டு மொழம் கொடுக்கலாம், கொடு (இது பூக்காரனுடன்). பொட்டி, எங்கே, பெஞ்சு மேலேயே வக்கப்படாதோ?'

'எந்த ஊருக்குப் போறேள்?' என்ற கேள்வியை கிழவர் புருஷனுக்கும் இல்லாமல் பெண்ணுக்குமில்லாமல் போட்டார்.

'நாங்கள் பட்டணம் போறோம். நீங்க?' என்று கேட்டாள் பெண்.

'நானும் பட்டணம்தான்!'

'பட்டணத்தில் எங்கே?'

'திருவல்லிக்கேணி அம்மா!'

'திருவல்லிக்கேணியில் எந்தத் தெருவு?'

'காலேஜ் ஆஸ்டலுக்கு!' என்று முடித்துவிட்டுக் கிழவர் கண்களை மூடிக்கொண்டுவிட்டார்.

'விக்டோரியா ஹாஸ்டலில்தானே சுந்தரம் இருந்தான்? தனியாக ரூம் வைத்துக்கொண்டு மூன்று மாசம் ஆச்சா? பாட்டு கத்துக்கறத்துக்கு சௌகரியமாக இருக்கலாம். நீங்க பார்த்தேளா அவனை சமீபத்தில்?'

'தீபாவளியின் போது பார்த்ததுதான்!'

அவ்வளவுதான் கிழவர் காதில் பட்டது. தூங்கிவிட்டார்.

விழுப்புரத்தில் வண்டி நின்று சிறிது நேரம் ஆன பிறகு அவர் தூக்கம் கலைந்தது. ஒரே கூச்சல், கூட்டம். மாயவரத்தில் ஏறின தம்பதிகளைக் காணோம். இடம் சௌகரியமில்லை என்று வேறு வண்டிக்குப் போய் விட்டார்கள். பதிலாக வேறொரு தம்பதி, சற்று வயதான விதவை ஒருத்தி.

'ஏண்டா, போர்ட்டர் ஏதுக்காக வச்சே? நாங்க ரெண்டுபேர் இருக்கமே, எவ்வளவு குடுத்தே?'

'என்னம்மா பிரமாதம், இரண்டணாதானே?' என்று பையன் தாயார் பக்கத்தில் மனைவிக்கு இடம் செய்துவிட்டு உட்கார்ந்தான். பெண் உட்காராமல் நின்றுகொண்டிருந்தாள். பையன் தாயார் அவளை உட்காரச் சொல்லவில்லை.

'அம்மா, அவளெ உட்காரச் சொல்லேன்!'

'உக்காரேண்டி அம்மா! நன்னாருக்கு வெக்கம்!' என்றாள் அம்மா. அதன்பிறகு மறுபுறம் திரும்பிக்கொண்டாள்.

'ரயில்லே மரியாதையெல்லாம் முடியுமாம்மா? உட்காரு!' என்று சாஸ்திரிகள் சொன்னார்.

பெண் கடைசியாக பெஞ்சியில் தொத்திக் கொண்டு உட்கார்ந்தாள்.

'அம்மா ஏதாவது வேணுமா?' என்று பையன் பெண்சாதியைக் கேட்பதற்குப் பதிலாகத் தாயாரைக் கேட்டான்.

'எனக்கென்னடா வேணும்! ஏண்டி, உனக்கேதாவது வேணுமா?' என்று அந்தம்மாள் சொன்னமாதிரியே, பெண்ணுக்குக் கேட்க வேண்டும் போல்தான் இருந்திருக்கும்.

'பெண் வேண்டாமென்று தலையை ஆட்டினாள்.

பூ விற்கிறவன் ஜன்னலண்டை வந்து 'ஜாதியரும்பு, கதம்பம்!' என்று கத்தினான். பையன் திருட்டுத்தனமாக மனைவி முகத்தைப் பார்த்தான். அவள் அவன் முகத்தைப் பார்க்காமல் எங்கோ திரும்பிக் கொண்டிருந்தாள்.

வண்டி புறப்பட்டது. சாஸ்திரிகள் மடிஸஞ்சியை அவிழ்த்து

சால்வையை எடுத்துப் போர்த்துக் கொண்டார்.

'அம்மா, கொஞ்சம் தீர்த்தம் வேணும்!' என்று பையன் கேட்டான்.

'இந்தக் குளிர்லே தாகம் பத்தரதா ஒனக்கு?' என்று சொல்லிக் கொண்டே தாயார்க்காரி கூஜாவைத் திறந்து ஜலம் எடுத்துக் கொடுத்தாள். பையன் விஷம் குடிப்பது போல அதைக் குடித்தான்.

'இப்படியும் தான் இருக்கு இன்னும் உலகம்!' என்று நினைத்துக் கொண்டு கிழவர் தூங்க முயன்றார்.

'அம்மா, தூக்கம் வந்தா படுத்துக்கோயேன்!' என்றான் பையன்.

'ரயில்லே தூக்கம் வராதோ? நீ வாணா படுத்துக்கோ!' என்றாள் தாயார் சுருக்கமாக.

'ஆனாலும் இந்த அம்மாள் இப்படிச் செய்யக்கூடாது. சிறுசுகள் மனஸு இவளுக்குத் தெரியவில்லையா என்ன? இவளும் ஒரு சமயம் சிறுசாக இருந்தவள்தானே – சிவனே என்னு பார்த்தும் பார்க்காமலும் இருந்தால் என்ன கேடு இவளுக்கு? இதனால்தானே பிள்ளைக்கு ஆத்திரமும் நாட்டுப் பெண்ணுக்கு வெறுப்பும் ஏற்படுகிறது. அதனால் தான் பையன்பள் இப்பொழுது....' கிழவர் இந்தமாதிரி எண்ணிக் கொண்டே தூங்கிப் போய்விட்டார்.

செங்கற்பட்டு வந்ததும் கண் விழித்துக் கொண்டார். வண்டியில் இருந்தவர்கள் எல்லோரும் இறங்கினார்கள். இரண்டு படித்த பெண்கள் வந்து ஏறினார்கள். ஒருத்தி உயரம்; ஒருத்தி கட்டை குட்டை; ஒருத்தி கிறிஸ்துவ மதத்தைச் சேர்ந்தவள்போல் இருந்தாள்; மற்றொருத்தி பிராம்மணப் பெண்; பூப்புடவைகள் கட்டிக் கொண்டிருந்தார்கள். மேலாக்கு தொங்கிக் கொண்டிருந்தது. கையில் பைகள். கூட இரண்டு பெரிய தோல் டிரங்குகள். பௌடர் பூசிய முகம்; வெளேரென்றிருந்த பல் வரிசை. உயரமாயிருந்தவள் முகம் உலர்ந்து போயிருந்தது. குட்டை யாயிருந்தவள் முகம் பருக்கள் நிறைந்திருந்தது. ஆங்கிலத்திலும் தமிழிலுமாக ஏதோ இடைவிடாமல் பேசிக் கொண்டே இருந்தார்கள். நடு நடுவே இளிப்பு, வரட்டுச் சிரிப்பு.

சாஸ்திரிகள் உட்கார்ந்திருந்தபடியே ஜாடையாகக் கவனித்துக் கொண்டிருந்தார். புது நாகரிக உருப்படிகளா இவை என்று ஆச்சரியப் பட்டார். சந்துரு சம்பாதித்திருக்கும் சாமானும் இப்படிப்பட்ட ஒன்று தானோ என்று எண்ணினதும் அவர் மனம் திகைத்தது.

அன்றிரவே ரயிலில் அவருக்கு மூன்று வகையான பெண்மை தரிசனங்கள் ஏற்பட்டுவிட்டன. முதலில் வாயாடியான புது மாதிரியும் பழைய மாதிரியும் அல்லாத பெண்; பிறகு முற்றிலும் பழைய மாதிரியான பேசாமடந்தை; கடைசியாக முற்றிலும் புதுமாதிரியான இரண்டு பெண்கள். இவர்களிடையே யார் நல்லவர்கள்? யார் உபயோக மற்றவர்கள்?

காலப்போக்கை அறிந்தவர் சாஸ்திரிகள். போசாமடந்தையின் யுகம் கழிந்துவிட்டதென்பது அவருக்குத் தெரியும். ஆனால், தன் முன்னால் உட்கார்ந்திருந்த பேதைகளா புது யுகத்தில் குடும்பப் பொறுப்பு வகிக்கப் போகும் பெண்கள்?...

எழும்பூர் ஸ்டேஷன் வந்ததும் சாஸ்திரிகள் கீழே இறங்கி வண்டி பேசினார்.

'ஸாமி, எங்கே போவணும்?' என்றான் வண்டிக்காரன்.

'திருவல்லிக்கேணி, காலேஜ் ஹாஸ்டல்! என்ன கேட்கிறாய்!' என்றார் அவர்.

'ஒரு ரூபா, ஏறுங்க!'

'அஞ்சணாதானே வாடிக்கை!'

'எந்தக் காலத்துலே? நீங்க காலேஜிலே படிச்சப்பவா?' என்று கிண்டல் செய்தான் வண்டிக்காரன்.

பனிரெண்டாணா என்று ஒருவிதமாகப் பேசிக்கொண்டு சாஸ்திரிகள் வண்டியில் ஏறினார். ஒன்றரை மணி நேரம் கழித்து வண்டி விக்டோரியா ஹாஸ்டல் போய்ச் சேர்ந்தது.

சாஸ்திரிகள் வண்டியைவிட்டு இறங்கின பொழுது நாலைந்து வாலிபர்கள் ஹாஸ்டலிலிருந்து வந்து கொண்டிருந்தார்கள். 'சந்திரசேகரன் எங்கே இருக்கிறான்' என்று சாஸ்திரிகள் அவர்களைக் கேட்டார்.

'சந்திரசேகரனா...ஓ! அவர் இப்பொழுது இங்கே இல்லை!' என்று சொல்லிச் சிரித்தான் வாலிபன்.

'அவர் ஐஸ்ஹவுஸ் ரோடில் இருக்கிறார்!' என்றான் மற்றொருவன்.

சாஸ்திரிகள் திகைத்து நின்றார்.

'அடே வண்டிக்காரா! ஐஸ்ஹவுஸ் ரோடில் வடக்கே பார்த்த சிறு பங்களா ஒன்று இருக்கிறது. அங்கே ஓட்டிக் கொண்டு போ!' என்று மூன்றாம் வாலிபன் சொன்னான்.

'சரி, ஏறுங்க ஸாமி!' என்று சாஸ்திரிகளை ஏற்றிக் கொண்டு வண்டிக் காரன் பீச் ரோட் வழியாகவே ஐஸ்ஹவுஸ் ரோடுக்கு வண்டியை ஓட்டினான்.

'ஸாமி, எறங்கி எந்த வீடுன்னு விசாரிங்க!' என்றான் வண்டியை நிறுத்திவிட்டு.

வண்டி நின்ற வீட்டு வாசலில் ஒரு வேலைக்காரப் பெண் நின்று கொண்டிருந்தாள்.

'காலேஜில் படிக்கிற சந்திரசேகரன் என்ற பையன் எங்கே இருக் கிறான் தெரியுமா?' என்று சாஸ்திரிகள் கேட்டார்.

வேலைக்காரப்பெண் உள்ளே ஓடினாள்.

சற்றுநேரம் அவள் வெளியே வரவில்லை. சாஸ்திரிகள் படியேறி முன்னாலிருந்த கூடத்தில் நுழைந்தார். கிழக்குப் பக்கத்திலிருந்த

ஒரு அறையில் இருந்து லலிதா கூடத்திற்கு வந்து சாஸ்திரிகளைப் பார்த்ததும், யாரென்று ஊகித்துக் கொண்டாள்.

ஒரு நிமிஷம் தான் என்ன செய்வதென்று தயங்கினாள். மறுநிமிஷம் முகமலர்ச்சியுடன் முன் வந்து 'வாருங்கள், வாருங்கள், இப்பொழுது தான் வருகிறீர்களா? உட்காருங்கள்! உங்கள் பிள்ளை வெளியே போயிருக்கிறார். இதோ வந்துவிடுவார்' என்று அவர் கையிலிருந்த மடிஸஞ்சியை மரியாதையாக வாங்கி மேஜைமேல் வைத்துவிட்டு சாய்மான நாற்காலியைக் காட்டினாள்.

சாஸ்திரிகள் ஒன்றும் பேச வராமல் மடிஸஞ்சியைக் கொடுத்துவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தார். அவருக்குப் பொறி தட்டிப்போயிற்று.

'ஸாமி!' என்று வண்டிக்காரன் கூப்பிட்டதுகூட அவர் காதில் விழ வில்லை.

லலிதா உடனே வெளியேபோய் வண்டிக்காரனை 'வாடகை என்ன?' என்று கேட்டாள்.

'பன்னெண்டணா ஆஸ்டலுக்குப் பேசின தம்மா, அங்கேயிருந்து இங்கே வந்திருக்கிறேன்!' என்றான், அவன் முறுக்கு பூறாவும் ஒடுங்கி விட்டது.

லலிதா உள்ளேபோய் ஒரு ரூபாயை எடுத்துக்கொண்டு வந்து அவனிடம் கொடுத்துவிட்டு அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளாமல் உள்ளே போனாள்.

சாஸ்திரிகள் திக்பிரமை கொண்டுபோய் உட்கார்ந்திருந்தார்.

'இன்னும் ஆகாரம் ஆகவில்லையே! பல்கூட தேய்க்க வில்லை போலிருக்கிறதே! வாருங்கள், வாருங்கள், ராத்திரியெல்லாம் தூக்கம் இருந்திராது. எப்பொழுது வண்டி ஏறினீர்கள்?' என்று மெதுவான குரலில் லலிதா நிதானமாகக் கேட்டாள். அவர் சிறிதுநேரம் பதிலே சொல்லவில்லை. அவள் பேசினதும் அவர் காதில் பட்டதாகவே தெரியவில்லை.

'சந்திரசேகரன் இங்கேயா இருக்கிறான்? நீ யாரம்மா?' என்று சாஸ்திரிகள் கடைசியாகக் கேட்டார்.

'இங்கேதான் இருக்கிறார்!' என்று முதல் கேள்விக்கு பதில் சொல்லி விட்டாள் லலிதா. இரண்டாவது கேள்விக்குப் பதில் சொல்வதற்குப் பதிலாக புன்னகையுடன் தலைகுனிந்து கொண்டாள்.

'எப்பொழுது வருவான்?'

'இதோ வந்துவிடுவார். நீங்கள் எழுந்திருந்து பல்தேய்க்கலாமே!' என்று லலிதா பரிவுடன் மெதுவாகச் சொன்னாள்.

'அவன் வரட்டும்!'

'நீங்கள் அதுவரை பசியுடன்...' என்று லலிதா முடிப்பதற்குள், கிழவர் சோகம்தோய்ந்த குரலில் தீனமாக 'எனக்குப் பசி, தாகம்

ஒன்றுமில்லை!' என்றார்.

லலிதாவின் முகம் சட்டென்று விழுந்துவிட்டது. திடீரென்று கண் களில் நீர் நிரம்பிற்று.

'ஏன், ஏன் அப்படிச் சொல்லுகிறீர்கள்?' என்று அவள் கேட்டதும் அவள் குரலில் தென்பட்ட துக்கத்தைக் கேட்டு சாஸ்திரிகள் திடுக்கிட்டு அவள் முகத்தைப் பார்த்து, 'அம்மா, எனக்கு ஒன்றும் தெரியவில்லை. நீ தானா....' என்று ஆரம்பித்து நிறுத்தினார்.

'ஆமாம், நான் தான். எழுந்து பல்தேய்க்கக்கூடாதா? மிகவும் களைத்துப்போயிருக்கிறீர்களே!' என்று லலிதா மறுபடியும் சொன்ன பொழுது அவள் பரிவு மனப்பூர்வமானதாக இருந்ததால் சாஸ்திரிகள் உள்ளத்தில் பாய்ந்தது.

'ஆகா, அம்மா!' என்று உடனே எழுந்தார்.

லலிதா சட்டென்று உள்ளேபோய் குழாயடியில் பல்பொடியும் பளபளவென்று தேய்த்திருந்த செம்பில் ஜலமும் வைத்துவிட்டு உள்ளே வந்து மறுபடியும் ஏதோ ஞாபகம் வந்ததுபோல் திரும்பச்சென்று, வெந்நீர் தவலையில் நிறைய ஜலம் நிறப்பி அடுப்பை மூட்டினாள். பிறகு உள்ளே வந்தாள்.

பத்துப் பதினைந்து நிமிஷங்கள் கழித்து சாஸ்திரிகள் உள்ளே வந்தார்.

'அடடா! வண்டி வாடகை! வண்டிக்காரன்...' என்று அவர் வாசற் பக்கம் எட்டிப்பார்த்தார்.

'அவனை அனுப்பிவிட்டேன்! காபிமட்டும் சாப்பிட்டு விட்டுஸ்நானம் செய்யலாமா?... இல்லாவிட்டால் வெந்நீர் தயாராக இருக்கிறது...

சாஸ்திரிகள் ஏதோ யோசனை செய்துகொண்டு தவிப்பதைக் கண்டு லலிதா, 'என் பெற்றோர்கள் வடமர்கள், நாங்கள் பாரத்துவாஜ கோத்திரம்!' என்றாள்.

'எந்த ஊர், அம்மா?'

'தஞ்சாவூரில்....'

சாஸ்திரிகள் குறுக்கிட்டு 'உட்காரம்மா, தஞ்சாவூரில் யார்?' என்று கேட்டார்.

'கலியாணராம சாஸ்திரிகள் எங்கள் அப்பா பெயர். அப்பா இல்லை. என் தமையன் ஆத்மநாதன் சாஸ்திரி அங்கே வக்கீல்.'

'அப்படியா?' என்று சொல்லிக்கொண்டே சாஸ்திரிகள் இடுப்பி லிருந்த சம்புடத்தை எடுத்துத் திறந்து விபூதியை நெற்றியில் பூசிக் கொண்டார். அப்பொழுதுதான் அவருக்குக் கொஞ்சம் நிம்மதி ஏற்பட்டது போலிருந்தது. அவருடைய முகத்தில் தென்பட்ட தெம்பைக்கண்டு லலிதா தைரியமடைந்தாள்.

சடக்கென்று உள்ளேபோய் லலிதா காபி எடுத்துக் கொண்டுவந்து மேஜைமேல் வைத்து 'காபி சாப்பிடுங்கள், பிறகு ஸ்நானம் செய்யலாம்!'

என்றாள்.

அவள் தொனியில் அன்பும், கட்டளையும் தென்பட்டதைக் கேட்டதும் சாஸ்திரிகளுக்குக் கொஞ்சம் ஆச்சரியமும் திருப்தியும் ஏற்பட்டன.

சாஸ்திரிகள் ஆனாலென்ன, அறுபது வயதுக்கிழவரானால் என்ன? மனிதர்தானே அவர்?

எதிரே அந்த வார்த்தைகளை இன்பமளிக்கும் குரலில் சொல்லிக் கொண்டு அதுவரையிலும் தென்படாத ஒரு புதுவனப்பும் சேர்ந்து பெண்ணழகு பரிபூர்ணமானதுபோல் நின்றாள் லலிதா. அதைக்கண்டு அவர் உள்ளம் என்றுமறியாத ஒரு ஆறுதலைக்கொண்டது. அவள் நாகரிக உடைதான் அணிந்திருந்தாள். ஆனால் அவள் முகத்தில் தென்பட்ட அடக்கமும் மரியாதையும்தான் அப்பொழுது அவர் கண்ணில் பட்டது.

'ஸ்நானம் செய்துவிட்டு....' என்று அவர் மன்னிப்புக் கேட்டுக் கொள்வது போன்ற குரலில் ஆரம்பித்தார்.

'இன்று ஒருநாள் பாதகமில்லை. நாழியாகிவிட்டதல்லவா?' என்று லலிதா கெஞ்சுதலாக வற்புறத்தினாள்.

சாஸ்திரிகள் காபியை எடுத்துக் குடித்தார்.

லலிதா உடனே பாத்திரங்களை உள்ளே கொண்டு போய் வைத்துவிட்டு வெளியே வந்து, 'சற்று சாய்ந்து கொள்ளுங்கள். ஊரில் எல்லோரும் சௌக்கியமா? அம்மா என்ன சொன்னார்கள்? காமு எழுதின கடிதம் வந்தது. குழந்தை சௌக்கியமாக இருக்கிறதா?' என்று கேட்டுக் கொண்டு சுவரோரமாக இருந்த நாற்காலியின்மேல் சாய்ந்த வண்ணம் நின்றாள்.

'அம்மா, உட்காரு, உனக்கு நின்று வாடிக்கை இருக்காது, உட்காரு, பாதகமில்லை!' என்று சாஸ்திரிகள் சொன்ன பிறகு அந்த நாற்காலி யிலேயே உட்கார்ந்தாள்.

சாஸ்திரிகளும் இரவெல்லாம் உட்கார்ந்துவந்த சிரமத்தில் நாற்காலி யில் சாய்ந்துகொண்டார்.

அப்பொழுது சந்திரசேகரன் மார்க்கெட் சாமான்களுடன் உள்ளே நுழைந்தான்.

தகப்பானார் நாற்காலியில் சாய்ந்து கொண்டிருப்பதையும், லலிதா ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருப்பதையும் ஒரு பார்வையில் பார்த்து அவன் திகைத்து வாசற்படியிலேயே நின்றுபோய்விட்டான்.

லலிதா அவன் கையிலிருந்த பையை வாங்கிக் கொண்டே சற்று உரக்க, 'அப்பா வந்திருக்கிறார்கள்!' என்றாள். சாஸ்திரிகள் எழுந்து உட்கார்ந்து பிள்ளையைப் பார்த்தார். பிள்ளை தகப்பனாரைப் பார்த்தான்.

'சந்துரு!'

'அப்பா!'

ஒரு எட்டில் தகப்பனார் பக்கத்தில் போய் நின்றான். கிழவர் கண்

களில் நீர் பெருகிற்று.

'அப்பா, உங்கள் மனஸு....' என்று சந்திரசேகரன் ஆரம்பித்தான்.

'சந்துரு... குழந்தை....' என்று ஆரம்பித்தார். அவரால் மேலே பேச முடியவில்லை.

'என்ன அப்பா?' என்று சந்திரசேகரன் இளகிப்போய்க் கேட்டான். தகப்பானார் படும் அவஸ்தையைப் பார்க்க அவனால் சகிக்கமுடிய வில்லை.

'சந்துரு, குழந்தை தங்கமான குழந்தை... ஆனால் ஊர்லே....'

சந்திரசேகரனும் லலிதாவும் உடனே இருபக்கமும் நின்று கொண்டார்கள். கிழவர் இரு முகங்களையும் மாறி மாறிப் பார்த்தார்.

'அப்பா, உங்களுக்கு ஆட்சேபணை இல்லையே! அது போதும்! ஊர் கிடக்கிறது! அப்பா, எழுந்திருங்கள் ஸ்நானம் செய்ய!'

'காபி சாப்பிட்டுவிட்டார்கள்! மெள்ள ஸ்நானம் செய்யட்டுமே!' என்றாள் லலிதா புன்னகையுடன்.

சந்திரசேகரனுக்குத் தூக்கிவாரிப்போட்டுவிட்டது. தகப்பனார் இருந்ததையும் மறந்துவிட்டான்.

'என்ன சொல்லுகிறாய் லலிதா?' என்று கேட்டான்.

லலிதா தலைகுனிந்துகொண்டே சிரித்தவண்ணம் உள்ளே போய் விட்டாள்.

'அப்பா, காபி சாப்பிட்டுவிட்டீர்களா?'

'சாப்பிட்டேன், குழந்தை கொடுத்தாள்!'

சந்திரசேகரன் ஆனந்தம் தாங்காமல் எழுந்து உள்ளே ஓடினான்.

'லலிதா, உன்னிடத்தில் என்ன மந்திரம் இருக்கிறது?' என்று கத்தினான். அத்துடன் நிற்கவில்லை. அவன் கைகளில் எவ்வளவு வலுவு இருந்தது என்பதை லலிதா அப்பொழுதுதான் அறிந்தாள்.

'பைத்தியம் பிடித்துவிட்டதா?' என்றாள் திணறிக் கொண்டு.

'நீ இந்தமாதிரியெல்லாம் மனிதர்களை மயக்கிக்கொண்டிருந்தால் யாருக்குத்தான் பைத்தியம் பிடிக்காது?'

'ஆமாம், என்ன வாங்கிக்கொண்டு வந்திருக்கிறீர்கள்?' என்று லலிதா பையை எடுத்துக் கீழே கொட்டினாள்.

பீன்ஸ், அவரை, டொமேடோ, உருளைக்கிழங்கு, வெங்காயம்– எல்லாம் கீழே விழுந்தன.

'ஆமாம், இதெல்லாம் அப்பா சாப்பிடமாட்டாரே?' என்று லலிதா சொன்னாள்.

'அப்பா இங்கே சாப்பிடுவாரா?'

'பின் எங்கே சாப்பிடுவது? நன்றாயிருக்கிறது! வாசலில் வாழைக் காயும் அவரைக்காயும் வாங்குங்கள்!'

'அப்பா... நீ குளிக்காமல்....' என்று சந்திரசேகரன் நிலைமையை

விளக்க முயன்றான்.

'சமைத்துவிட்டுக் குளிப்பதற்குப் பதிலாக இன்று குளித்துவிட்டுச் சமைக்கிறேன். அவ்வளவுதானே! நான் என்ன...?'

'அப்பா சாப்பிடமாட்டார். சாஸ்திரி ஹோட்டலுக்குத் தான் கூட்டிக் கொண்டு போகவேண்டும்.

'நான் சாப்பிடச்சொல்லுகிறேன், உங்கள் காரியத்தைப் பாருங்கள்!' என்று லலிதா சிரித்துக் கொண்டே அப்புறம் போனாள்.

சந்திரசேகரன் தகப்பனாரிடம் வந்து 'ஊரில் எல்லாரும் சௌக்கியமா? அம்மா இருமல் எப்படி இருக்கிறது?' என்றான்.

'சௌக்கியம்தான். உங்கம்மாதான் குதிகுதி என்று குதிக்கிறாள். ஊரில் என்னை இருக்கிவிடமாட்டேன் என்று விட்டார்கள். இங்கே வந்து பார்த்தால் இப்படி இருக்கிறது. ஏண்டாப்பா, சமையல் செய்தா சாப்பிடுகிறீர்கள்?'

'ஆமாம் அப்பா, கிளப்பிலிருந்து கொண்டுவரவேண்டாம் என்று சொல்லிவிட்டாள். தானே சமையல் செய்கிறாள்.'

'ஆனால் கலியாணமே செய்துகொண்டுவிட்டாயா?'

'இல்லை அப்பா! இரண்டுபேரும் ஒரு வீட்டில் இருக்கிறோம், அவ்வளவுதான்!'

'ஏண்டா, நல்ல நாள் பார்த்து சமைக்கவாண்டாமோ?' என்று சாஸ்திரிகள் சொல்லிக்கொண்டிருக்கும் போது லலிதா வந்தாள்.

'சமையல் பத்து மணிக்குள் ஆகிவிடும்...'

'இல்லை அம்மா, எனக்குப் பூஜை ஜபம் நாழியாகும்...'

'நான் ஸ்நானம் செய்துவிட்டுச் சமைக்கிறேன். பூஜை ஜபமாகட்டுமே, இன்று காலேஜ் கிடையாது!'

சாஸ்திரிகள் சிறிதுநேரம் யோசனை செய்தார். பிறகு மெதுவாகப் பேசலானார்.

'ஸாக்ஷாத் லலிதாம்பிகையேபோல் நீ சொல்லுகிற பொழுது நான் என்ன சொல்லுகிறது, அம்மணி? அடே, இன்று வசந்த நவராத்திரி, வெள்ளிக்கிழமை. திவ்வியமான தினம். தாயே, பத்தரை மணிக்குமேல் உலை வை, பாயஸம் கூட வை!'

சந்திரசேகரனுக்குத் தலைகால் புரியவில்லை சந்தோஷத்தில்.

'அப்பா, நிஜமாகவா சொல்லுகிறீர்கள்?'

'சந்துரு, நேற்று ரயில் ஏறுகிறபோழுது நான் இன்று இப்படிப் பேசப்போகிறேன் என்று எனக்குத் தெரியாது. ஈசுவரியின் ஆக்ஞை! குழந்தை முகத்தைப் பார்த்ததுமே என் மனஸு மாறிவிட்டது. காலேஜில் படிக்கிற பெண்ணாயிருந்தாலும் குழந்தையிடமிருக்கும் நல்ல குணங்கள் நம்மகங்களில்கூட இருக்காது. அதுதானடா முக்கியம்! குழந்தை பிரௌடை என்ற தோஷம் ஒன்றுதான். சாஸ்திரங்களில் விசேஷ

சந்தர்ப்பங்களில் எல்லாவற்றிற்கும் அனுமதி இருக்கிறது - எல்லா வற்றிற்கும் தடை இருக்கிறது. ஆகையால் பாதகமில்லை என்று தீர்மானித்துவிட்டேன்.'

'லலிதா பி.ஏ.யில் சம்ஸ்கிருதம்!' என்று இதுதான் சமயம் என்று சந்திரசேகரன் போட்டுவைத்தான்.

'அப்படியா! காவியத்தில் என்ன படிக்கிறாய் அம்மா?' என்று ஆரம்பித்துவிட்டார் சாஸ்திரிகள்.

'ரகுவம்சமும், நாடகத்தில் சாகுந்தலமும்!' என்று லலிதா வெட்கத் துடன் சொன்னாள்.

'ஆ சாகுந்தலமா! ஸ்தாம்ஹி ஸந்தேஹ பதேஷு வஸ்துஷு பிரமாணம் அந்தக்கரண பிரவிருத்தய:! என்ற மகத்தான வாக்கியம் ஞாபகமிருக்கிறதா!'

'ஞாபகமிருக்கிறது!'

'அது எனக்கு இன்று பொருத்தம் குழந்தை! எனக்கு வயது அறுபதா யிற்றம்மா! ஒரு கெட்ட சிந்தனை இல்லாமல் காலம் கழித்துவிட்டேன். தெரிந்து ஒரு தப்பு செய்ததில்லை. இன்று என்னுடைய அந்தக்கரணம் உன்னை சந்துருவுக்கு ஏற்றவள்தான் என்று அங்கீகரித்துவிட்டது. அது தான் பிரமாணம்.'

கிழவர் தழுதழுத்த குரலில் இப்படிச் சொல்லிக்கொண்டே கண்ணீர் விட்டார்.

தான் எதிர்பார்த்ததற்கு நேர் விரோதமாக அந்தக் கிழவர் காட்டிய தாராள மனத்தையும், அவருடைய நேர்மையையும் கண்டு திகைத்த வளாய் லலிதா விக்கிரகம் போல் நின்றாள். அவள் கண்களும் கலங்கி விட்டன.

சந்திரசேகரன் தான்செய்த காரியம் இவ்வளவு சுலபமாக தகப்பனா ருடைய அங்கீகாரத்தைப் பெற்றது கண்டு உள்ளம் பூரித்தான். தகப்பனா ருடன் விரோதமும் மனஸ்தாபமும் ஏற்படும்; முகாலோகனம்கூட நின்றுபோய்விடும் என்றெல்லாம் எதிர்பார்த்தான். அதையெல்லாம் எப்படி சகிப்பது என்ற கவலையில் ஆழ்ந்து கிடந்தான். திடீரென்று நிலைமை இப்படிமாறும் என்று அவன் நினைக்கவே இல்லை.

ஒருமணி நேரம் கழித்து அறையில் சாஸ்திரிகள் பூஜையில் உட்கார்ந்திருந்தார். லலிதா நைவேத்தியம் கொண்டு வந்து வைத்தாள். பூஜை முடிந்ததும் அவர் லலிதாவைக் கூப்பிட்டு நமஸ்காரம் செய்யச் சொன்னார். மனதில் ஏதோ வேண்டிக்கொண்டு அவளுக்கு மந்திராக்ஷை கொடுத்தார்.

பிறகு சாப்பிட உட்கார்ந்தார்கள்.

'எப்பொழுதம்மா இவ்வளவு நன்றாகச் சமைக்கக் கற்றுக்கொண்டாய்?' என்று சாஸ்திரிகள் ஆச்சரியப்பட்டுக்கொண்டே சாப்பிட்டார்.

மறந்துபோய் லலிதா 'கப்பில் பாயஸம் வைக்கட்டுமா?' என்று கேட்டுவிட்டாள்.

'வேண்டாம்மா!' என்றுதான் சாஸ்திரிகள் சொன்னார்.

வந்து இரண்டு நாட்களாயின. சாஸ்திரிகள் ஊருக்குப் புறப்பட வேண்டும் என்று அடிக்கடி சொன்னாரே தவிர உள்ளூர கிளம்புவதற்கு இஷ்டமில்லை. முதலில் ஊருக்குப் போய் என்ன சொல்வது என்ற யோசனை. இரண்டாவது லலிதா செய்த சிச்ருஷை அவருக்கு வெகு திருப்திகரமாக இருந்தது. வீட்டிற்குமேல் ஆறுதலாக இருந்தது. காலா காலத்தில் ஸ்நானபானம், பூஜை புனஸ்காரம், போஜனம் பலகாரம் தவறாமல் நடந்தது.

மூன்றாம் நாள் காலை சாப்பிடும்பொழுது 'அம்மா, நான் இன்று ராத்திரி வண்டிக்குக் கிளம்பிவிடவேண்டும். வீட்டில் யாருமில்லை. இனிமேல் தாமதிக்கக்கூடாது' என்றார்.

'இன்னும் இரண்டு நாள் கழித்து வந்து விடுவதாகக் கடிதம் எழுதி விட்டால் போகிறது. நான் வேண்டுமானால் மாமிக்கு எழுதுகிறேன்.'

'வேண்டாம், வேண்டாம். நான் போகவேண்டியது தான் அம்மா! ஆமாம் பரீட்சை எப்பொழுது?'

'இன்னும் ஒரு மாதமிருக்கிறது.'

'பரீட்சை முடிந்ததும் முகூர்த்தம் வைத்துவிடுகிறேன்' என்று சொல்லி கிழவர் வாத்ஸல்யத்துடன் லலிதாவின் முகத்தைப் பார்த்தார்.

'உங்கள் இஷ்டப்படி பிரியப்படி செய்யுங்கள்' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போது வாசலில் குதிரை வண்டி வந்து நின்றது.

'என் தமையன் வந்துவிட்டார்! இதோ வந்துவிட்டேன்!' என்று சொல்லிவிட்டு, லலிதா வாசற்பக்கம்போய் வந்தவரை எதிர்கொண்டு 'வா! அண்ணா!' என்று உள்ளே அழைத்துக்கொண்டு வந்து ஒரு நாற்காலியை மேஜையருகில் நகர்த்தி, 'உட்காரு! வண்டியில் ஏதாவது சாமான் இருக்கிறதா?' என்றாள்.

'இல்லை வாடகையும் கொடுத்துவிட்டேன்' என்று சொல்லிவிட்டு வந்தவர் எதிரே உட்கார்ந்திருந்த சாஸ்திரிகளைப் பார்த்து 'இவா யாரு?' என்று தங்கையைக் கேட்டார்.

'இவா திருவெழுந்தவூர்' என்று வெகு சாமர்த்தியமாக லலிதா சொன்னாள்.

'ஓகோ, அப்படியா நமஸ்காரம். எப்போ வந்தேள்!' என்று ஆத்மநாத சாஸ்திரி பேச ஆரம்பித்தார்.

'நான் வந்து இரண்டு நாளாகிறது!'

'இரண்டு நாளாகிறதா!' என்று சொல்லி நிலைமை புரியாதவராய் அவர் தங்கை முகத்தைப் பார்த்தார். தங்கை புன்னகை செய்தாள்.

'அம்மா, அவாளுக்குக்காபி கொடு!' என்று சாஸ்திரிகள் சொன்னார்.

'நான் காபி எல்லாம் சாப்பிட்டாய் விட்டது. நீங்கள் ஆயிற்றோ?'

'ஆகிவிட்டது. நீங்கள் யதேச்சையாக வந்தாற்போலிருக்கிறது.'

'இல்லை, லலிதா கடிதம் எழுதி இருந்தாள்' என்று சொல்லிக் கொண்டு சுற்றுமுற்றும் பார்த்தார் வக்கீல்.

லலிதா சிரித்துக்கொண்டு 'வெளியில் போயிருக்கிறார், வந்து விடுவார்!' என்றாள்.

ரகளை ஒன்றும் இல்லை என்று மட்டும் ஆத்மநாத சாஸ்திரி தீர்மானம் செய்துகொண்டார்.

'அம்மா, சித்தி சௌக்கியமா?' என்று கேட்டாள் லலிதா.

'சௌக்கியந்தான்.'

'இதோ வந்துவிட்டேன்' என்று லலிதா உள்ளே போனாள்.

'குழந்தை ரொம்ப புத்திசாலி!' என்று சாஸ்திரிகள் ஆரம்பித்தார்.

'பெரியவாள் ஆசீர்வாதம். நீங்கள் இந்த விஷயத்தை ஆமோதிப் பீர்கள் என்று நான் நினைக்கவே இல்லை.'

'ஊரைவிட்டுப் புறப்படும்பொழுது நானும் நினைக்கவேயில்லை. குழந்தையைப் பார்த்த பிறகு....'

'நான் ரொம்ப பயந்து கொண்டிருந்தேன். சிறுசுகள்...'

'லலிதா தவறு செய்யக்கூடியவள் என்றே எனக்குப் படவில்லை. அவள் செய்வது ஒவ்வொன்றும் அவ்வளவு தீர்மானமாகவும் ஒழுங் கானதாகவும் இருக்கிறது. பையன் பிசகு செய்யலாம். குழந்தை ஒருக்காலும் செய்யமாட்டாள்.'

'லலிதா'

'என்ன அண்ணா?' என்று கேட்டுக்கொண்டு லலிதா வெளியே வந்தாள்.

'என்ன செய்கிறாய்?'

'சமையல்...'

'சமையலா!...' என்று ஆத்மநாத சாஸ்திரி ஆச்சரியத்துடன் கேட்டார்.

'திவ்வியமாகச் சமைக்கிறாள்' என்று சாஸ்திரிகள் ஆரம்பித்தார்.

'நீங்கள்....' என்று ஆத்மநாத சாஸ்திரி இழுத்தார். சந்திரசேகரன் சுந்தரத்துடன் உள்ளே நுழைந்தான்.

நுழைந்தவன் புதிதாக வந்திருந்த பேர்வழி யார் என்று ஊகித்துக் கொண்டே, 'வாருங்கள், இப்பொழுதுதான் வந்தீர்களா? சுந்தரம், உட்காரு!' என்று தானும் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான்.

'சுந்தரம், இவர் லலிதாவின் தமையன்!' என்று இருவரையும் அறிமுகப்படுத்தி வைத்துவிட்டு, 'அப்பா, இவன் என் நண்பன் சுந்தரம்' என்றான்.

'அப்படியா, எந்த ஊர்?'

'மதுரை ஜில்லா சோழவந்தான்?'

இதையெல்லாம் கவனித்துக்கொண்டு நின்ற லலிதா 'அவரும் இன்று இங்கேயே சாப்பிடட்டும்!' என்றாள்.

'பின் சாப்பிடாவிட்டால் யார் விடுகிறார்கள்?'

'அண்ணா, எழுந்து ஸ்நானம் செய்யேன்!'

'மைலாப்பூரில் நண்பர் ஒருவர் இருக்கிறார். அவரைப் பார்த்து விட்டு அங்கேயே இந்த வேளை சாப்பிடுகிறேன்.'

'அப்பா, ராத்திரி ஊருக்குப் போகிறார்' என்றான் சந்திரசேகரன்.

'அதற்குள்ளா! இன்னும் இரண்டு நாள்....' என்று ஆத்மநாத சாஸ்திரி இழுத்தார்.

'இல்லை, நான் வந்தே இரண்டு நாளாகிவிட்டது. இனிமேல் தாமஸம் செய்யக்கூடாது.

'அநேகமாக சாயந்திரமே இங்கே வந்து விடுகிறேன். தவறினால்' என்று அவர் முடிப்பதற்குள் சாஸ்திரிகள்,

'முகூர்த்தத்தின் போது சந்திப்போம்' என்று முடித்ததைக்கேட்டு, ஆத்மநாத சாஸ்திரி தங்கை முகத்தையும், சந்திரசேகரன் முகத்தையும் மாறி மாறிப் பார்த்தார்.

'பரீட்சை முடிந்ததும் முகூர்த்தம் வைக்கவேண்டுமென்கிறார் அப்பா' என்று சந்திரசேகரன் சொல்லிமுடிப்பதற்குள் கிழவர், 'அதற்கு மேல் தாமஸம் செய்யவே கூடாது. கலியாணம் எங்கே?'

'தஞ்சாவூரில் செய்யலாமே!' என்று ஆத்மநாத சாஸ்திரி சொன்ன தற்கு சாஸ்திரிகள் 'அதைப் பற்றியும் இப்பொழுதுதான் நான் தீர்மானத் திற்கு வந்தேன். திருவெழுந்தவூரிலேயே நடக்கட்டும்' என்றார்.

'அப்பா...' என்றுதான் சந்திசேகரனால் சொல்லமுடிந்தது.

'பெரியவாள் சொல்லுவதற்கு நான் ஆட்சேபணை சொல்லவில்லை. ஆனால் கிராமாந்தரத்தில் இந்தமாதிரி விவாகத்திற்கு ஏதாவது....'

'அதையெல்லாம நான் லட்சியம் செய்யப்போவதில்லை.'

'அப்புறம் உங்களுக்கு ஊரில்...'

'எதற்கும் நான் இனிமேல் பணியமாட்டேன்!'

மறுநாள், 'சம்பந்திகள்' இருவரும் ஊருக்குப் போய்விட்டார்கள். இளைஞர்கள் உலகமாகிவிட்டது பட்டணம் மறுபடியும்.

லலிதா சுலோசனாவைச் சாப்பிடக் கூப்பிட்டாள்.

'நான் வரமாட்டேன் அம்மா! அவரைப் பார்க்க எனக்கு வெட்கமா யிருக்கும்'.

'சரிதானடி ரொம்பத்தான். தெரியாதாக்கும் உன் சமாசாரம் எனக்கு. சுந்தரம்தான் நேற்று சொல்லிக் கொண்டிருந்தாரே!'

'என்ன சொல்லிக்கொண்டிருந்தார்? பொய்யும் புளுகும்!'

'நீ அவருடன் பேசவே இல்லையா?'

'நான் பேசவில்லை....அவர்தான்...வந்து...பேசினார்!'

'நீ பதில் சொன்னாயோ இல்லையோ?'

'ஒருவர் வந்து பேசுகிறபோது...!'

'பின் பேசவில்லை என்றாயே?'

'உன் மாதிரியெல்லாம் சாமர்த்தியமாகப் பேசத் தெரியாது எனக்கு'

'ஒண்ணுக்கு இரண்டா கயிறு திரிக்கத் தெரியும்?'

'என்னடி சொல்லுகிறாய்?'

'ஊருக்கு முன்னால் உன் அக்காவுக்கு எதற்கு இதைப் பற்றியெல்லாம் எழுதினாய்?'

'அதெப்படி உனக்குத் தெரியும்?'

'திருவெழுந்தவூரில் ஆள் வைத்திருக்கிறேன்' என்று லலிதா சிரித்துக் கொண்டே சொன்னாள்.

சுலோசனாவுக்குத் தூக்கிவாரிப் போட்டுவிட்டது.

'அங்கே யாரடி இருக்கிறார்கள்?'

'அவர் தாயார், தகப்பனார், தங்கை...'

'ஐயோ, எனக்குத் தெரியாதே, பத்மாஸனி எழுத வில்லையே?'

'அந்தக் குற்றத்திற்கு இப்பொழுது உன்னை எப்படி தண்டிக்கிறது?'

'நான் ஒன்றும் தப்பாக எழுதவில்லையடி.'

'சரி, இன்று எங்களோடு சாப்பிட வேண்டியது.'

'லலிதா, வேண்டாமடி!'

'முடியாது. சாயந்திரம் ஆறு மணிக்கு வந்துவிடு! சாப்பாட்டிற்கு பிறகு அங்கேயே படுத்துக்கொள்ளலாம்.'

'அவர் என்ன சொன்னார்?'

'ஏன் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறு என்கிறதோ?'

'குற்றமும் இல்லை, குறுகுறுப்பும் இல்லை.'

'இப்பொழுதே என்னுடன் வாயேன்! சமையலுக்கு ஒத்தாசையாக இருக்கலாம்.'

'நீயா சமைக்கிறாய்?'

'ஆமாம்.'

இருவரும் பேசிக் கொண்டே காலேஜிலிருந்து பீச் வழியாக வீட்டுக்கு வந்தார்கள்.

கூடத்தில் சந்திரசேகரனும், சுந்தரமும் உட்கார்ந்திருந்தார்கள். சுலோசனா எதற்காக சுந்தரத்தைப் பார்த்தவுடன் சட்டென்று பின் தங்க வேண்டும்?

லலிதாவின் மேலாக்கைப் பிடித்திழுத்து ரகசியமாக 'நான் போகிறேனடி!' என்று திரும்பினாள்.

லலிதா அவளைக் கெட்டியாகப் பிடித்திழுத்துக் கொண்டு உரக்க 'இதோ பாருங்கள், இவள் உள்ளே வரமாட்டேன் என்கிறாள்!' என்று போலிப்புகார் குரலில் சொன்னாள்.

சந்திரசேகரன் 'விடாதே!' என்று சொல்லிச் சிரித்தான். சுந்தரம் சிலைபோல உட்கார்ந்திருந்தான்.

'என்னடா சமாசாரம் சுந்தரம்?'

'ஒன்றுமில்லையே!'

'பின் ஏன் மிஸ். சுலோசனா உன்னைக் கண்டு இவ்வளவு பயப் படுகிறாள்?'

'உன்னைக் கண்டு தான் என்று நினைக்கிறேன்!'

'கேட்டு விடுவோமே! என்ன மிஸ். சுலோசனா? யாரைக் கண்டு இவ்வளவு பயம்?'

'உங்களைக் கண்டுதான்!' என்று சுலோசனா ஒருவிதமாக சமாளித்துக் கொண்டு சொல்லிவிட்டு லலிதாவுடன் உள்ளே போனாள்.

'பரீட்சைக்குப் பிறகு முகூர்த்தம் என்று அப்பா சொல்லிவிட்டுப் போய்விட்டார். உனக்கெப்பொழுது முகூர்த்தம்?' என்றான் சந்திர சேகரன்.

'உன் நிலைமை எனக்கு இன்னும் வரவில்லை. வந்த பிறகு சொல்லு கிறேன்.'

'உண்மையாகக் கேட்கிறேன். சுலோசனா என்ன சொன்னாள்?'

'நான் கேட்கவில்லை.'

'லலிதாவைக் கேட்கச்சொல்லட்டுமா?'

'இந்த மத்தியஸ்தம் வேண்டாமே!'

'நீயே கேட்டுக் கொள்கிறேன் என்கிறாயோ, உத்தமம் தான்.'

'உனக்கென்ன கவலை?'

'ஒரே முகூர்த்தமாகப் போகுமே என்று பார்த்தேன். வேறொன்று மில்லை.

'எனக்கு அபிப்பிராயம் இல்லை?' என்று சுந்தரம் அப்பொழுதுதான் சொன்னான்.

'ஏண்டா சுந்தரம்?'

'என் கதை வேறு, சந்துரு! அதை இத்துடன் கலக்காதே!'

'அதென்ன கூடமாகப் பேசுகிறாய்?'

'கூடம் ஒன்றுமில்லை. பிறகு ஒருநாள் சொல்லுகிறேன். நான் போகிறேன்!' என்று சுந்தரம் சட்டென்று எழுந்தான்.

'சுந்தரம், சுந்தரம், என்னடா சமாசாரம்?' என்று சந்திரசேகரன் கவலையுடன் தானும் எழுந்து அவனை மறித்துக் கொண்டான்.

'சந்துரு நீ சந்தோஷமாக இருக்கும்பொழுது நான் பூசை வேளையில் கரடியை விட்டு ஓட்டுவது போல என் கதையை அவிழ்க்க வேண்டாம். எல்லாம் பிறகு சொல்லுகிறேன்!' என்று படி இறங்கினவன் மறுபடியும் ஏறிவந்து ரகசியமாக 'லலிதாவிடம் சூசனையாகச் சொல்லிவிடு— எனக்கு அபிப்பராயம் இல்லை என்பதை. பாவம் பெண் அகாரணமாகப்

பிறகு...' என்று சொல்லிவிட்டுப் போய் விட்டான்.

சந்திரசேகரன் லலிதாவிடம் என்ன சொல்வது என்று தெரியாமல் தவித்தான்.

பிறகு மறுநாள் 'லலிதா, சுந்தரம் சுலோசனாவிடம் அபிப்பராயம் கொண்டிருக்கிறதாக நீ நினைக்கிறாயா?' என்று கேட்டான் ஜாக்கிரதை யாக.

'முதலில் நினைத்தேன். அந்த அசடும் கொஞ்சம் நினைக்கிறாள். ஆனால் அப்படி ஒன்றும் இல்லை.'

லலிதா உனக்கு எப்படித் தெரியும்?' என்று சந்திரசேகரன் ஆச்சரியத் துடன் கேட்டான்.

'பார்க்கும்பொழுதே தெரியாதா?' என்றாள் லலிதா அசிரத்தையாக.

'உன்னைக் கண்டால் எனக்கு பயமாக இருக்கிறது லலிதா!'

'ஐயோ பாவம்! என்ன செய்வீர்கள்?' என்று லலிதா சந்தோஷத்துடன் கண்களை மிதக்கவிட்டாள்.

'அப்பா மனதை மாற்றிவிட்டாயே, நான் எம்மாத்திரம்?'

## 4

ராமஸ்வாமி சாஸ்திரிகள் ரயிலில் தூங்கவே இல்லை. இரவு எழும்பூர் ஸ்டேஷனில் சந்திரசேகரனும் லலிதாவும் கூட வந்து இரண்டாம் வகுப்பில் ஏற்றி உட்காரவைத்தது முதல் கனவுபோன்ற எண்ணத்தில் ஆழ்ந்தவர், வண்டி சிதம்பரம் தாண்டின பிறகுதான் சுய பிரக்ஞை அடைந்தார். பட்டணத்திலிருந்த அந்த நாட்களின் நினைவுகள் வரிசை யாக அவர் மனதிற்கு வந்தன. அவர் போய் இறங்கினது முதல் வண்டி யேறினதுவரை நடந்த நிகழ்ச்சிகளை அப்பொழுதப்பொழுது உணர்ந்து அனுபவிக்க நேரமும் சந்தர்ப்பமும் இல்லாம் போகும்படியாக அவ்வளவு இடைவிடாத தொடர்ச்சியாகவும், மெய்மறக்கச் செய்யும் இன்பமாகவும் அவை நடைபெற்றன. வண்டியில் உட்கார்ந்து வண்டி புறப்பட்ட பிறகுதான், அந்த நேரமும் சந்தர்ப்பமும் அவருக்கு ஏற்பட்டன.

முக்கியமாக லலிதா தான் அவரிடம் நடந்துகொண்ட வகையில் அவர் யோசித்து ஒன்றைச் செய்யமுடியாதபடியும், கண்களை மூடிக் கொண்டு அவள் சொன்னபடி யாவற்றையும் செய்யும்படியாகவும் செய்துவிட்டாள். அவ்வளவு இயற்கையாகவும், துரிதமாகவும் அவள் தன் அன்பைக் கொண்டு அவரை தலைகால் தெரியாமல் இழுத்துச் சென்றாள்.

அந்த நாட்கள் கழிந்த வகையை நினைத்து நினைத்து கிழவர்

மறுபடியும் அந்த வாழ்வை வாழ்ந்து அனுபவித்தார். கூடவிருந்த நாகரிகமான பிரயாணிகள் தங்களுடன் ஒரு மடிசஞ்சி உட்கார்ந்திருப் பதைக் கண்டு வியந்ததை அவர் கவனிக்கவில்லை. பேச்சுக் கொடுக்க வந்த ஒரு வயது சென்ற வக்கீலுக்குக் கூட அவர் ஒரு வார்த்தையில் பதில் சொல்லிவிட்டு மௌனமானார்.

மாயவரம் ஸ்டேஷனில் இறங்கி வீடுநோக்கி புறப்பட்ட பொழுதும், பழைய காவேரிப் பாலமும் ரோட்டோரத்து மரங்களும் கண்களில் பட்ட பிறகுதான் ஊர் வந்த நினைப்பே அவருக்கு நிச்சயமாயிற்று.

'அம்மா, லலிதா!' என்று வாசற்கதவைத் தட்டினார்.

காமு வந்து கதவைத் திறந்து கையிலிருந்த மூட்டையை வாங்கிக் கொண்டு, 'என்ன அப்பா, லலிதா என்று கூப்பிட்டீர்கள்?'என்று கேட்டாள்.

'லலிதா என்று கூப்பிட்டேனா! அதே நினைப்பு அம்மா!' என்று அவர் வண்டியிலிருந்த பெட்டியையும் எடுத்துக்கொண்டு உள்ளே போனார்.

'என்ன அப்பா, மடிசஞ்சியோடு போனாய், பெட்டி, மூட்டை பலமாக இருக்கிறதே!' என்றாள் காமு.

'அதேன் கேட்கிறாய் போ! லலிதா பட்டணத்தையே என் கையில் மூட்டை கட்டிக் கொடுத்துவிட்டாள்!' என்று தகப்பனார் வெகு திருப்தி யுடன் சொன்னதைக் கேட்டு காமு உள்ளம் குதிப்பவளாய் 'அப்பா, லலிதாவை உனக்கு பிடித்திருக்கிறதா?' என்று அவசரமாகக் கேட்டாள்.

'எல்லாம் சொல்லுகிறேன் அம்மா!' என்று கிழவர் அங்கஸ்திரத்தை விரித்துக் கொண்டு கூடத்தில் படுத்துக் கொண்டார்.

அவர் மனைவி வந்து, 'என்ன போன சமாசாரம், கலியாணம் ஆயிடுத் தோன்னோ?' என்றாள்.

'இரு சும்மா, உனக்கென்ன இந்த அவசரம்?' என்று காமு தாயாரை அடக்கிவிட்டு தகப்பனாரிடம் போய் உட்கார்ந்துகொண்டு 'அப்பா, அண்ணா உடம்பு ஒண்ணுமில்லாமல் இருக்கிறானா?' என்று ஆரம்பித்தாள். அவள் தாயார் மற்றொரு மின்சார விளக்கையும் போட்டு விட்டு கொஞ்சம் தூரத்தில் பொறுமையாக உட்கார்ந்து கொண்டாள், ஆத்திரத்தைப் பூராவும் வெகு சிரமப்பட்டு அடக்கிக் கொண்டு.

'சந்துரு சௌக்யமாக இருக்கிறான், அம்மா!'

'என்ன சொன்னான், அப்பா?'

'அவன் ஒன்றும் சொல்லத் தேவையிருக்கவில்லை. எல்லாம் நானே பார்த்து, உணர்ந்து அறிந்து கொண்டேன்.'

'லலிதா...'

'லலிதா அவனுடன் கூடத்தான் இருக்கிறாள்!'

லக்ஷ்மி துள்ளி எழுந்து, 'என்ன என்ன, அவ அவனுடன் இருக்

கிறாளா? நீங்க....' என்று மேலே பேசுவதற்குள் காமு குறுக்கிட்டு 'சற்றுத்தான் இரேன், அம்மா, என்ன பதட்டம் உனக்கு?' என்றாள்.

'என்னடி இருக்கிறது? குடிமுழுகிப் போச்சுபோலே இருக்கே-இந்த பிராமணன்....'

'சும்மா இருக்கிறாயா இல்லையா?-அப்பா, லலிதாவும் அண்ணாவும் தனியாக இருக்கிறார்களா?'

'ஆமாம் அம்மா! லலிதா சமைக்கிறாள் – திவ்வியமாக சமைக்கிறாள்!'

'ஐயையோ எழவே! நீங்கள் போய் அவ கையிலே சாப்புட்டுட்டு வந்தூட்டேளா?'

'உன் நாட்டுப்பெண் கையில் சாப்பிடாமல்...'

'நாட்டுப் பெண்ணா! கலியாணமாயிடுத்து-எனக்குத் தெரியுமே! இவர் போய் இத்தனை நாள் அங்கேயே உக்காந்துண்டிருந்தப்பவே தெரியும். இவரையும் மயக்கிப் புட்டா அவ...'

'இந்தா, என்ன தாறுமாறாகப் பேசுகிறாய்? குழந்தையைப்பற்றி தெரியமால் ஒன்றும் உளறாதே. கிடைக்கத்தக்க பெண் அல்ல. நம் பாக்கியம்.'

காமுவுக்கு சந்தோஷம் தாங்கவில்லை. 'அப்பா! அப்பா! மன்னி என்ன சொன்னாள்?'

'காமு, உன் மன்னி ஒன்றும் சொல்லுவதே இல்லையம்மா. எல்லாம் செய்துவிடுவதுதான் இவள் வழக்கம். பெட்டியைத் திறந்து பார், மூட்டையை அவிழ், தெரியும்!'

காமு ஆவலுடன் மூட்டையை முதலில் அவிழ்த்தாள். அதில் மேலே வெற்றிலை பாக்கு, மஞ்சள் குங்குமம் இருந்தன. அடியில் பூ ஒரு பொட்டலம் இருந்தது.

'இதெல்லாம் வழியில் வாங்கினாயா, பட்டணத்திலேயே வாங்கினாயா?'

'நான் ஒன்றும் வாங்கவில்லை. லலிதா மூட்டை கட்டிக் கொடுத்தாள்.

காமுவின் முகம் மகிழ்ச்சியால் மலர்ந்தது. குங்குமப் பொட்டலத்தை அவிழ்த்து கொஞ்சம் குங்குமம் எடுத்து நெற்றியில் வைத்துக் கொண்டு அம்மாவிடம் கொடுத்தாள். லக்ஷ்மி மௌனமாக அதை வாங்கி மறுபுறம் வைத்தாள். காமு பிறகு பூவை எடுத்துக் கிள்ளி வைத்துக் கொண்டு தாயாரிடம் கொடுத்தாள்.

'வையேன் கீழே!' என்றாள் லக்ஷ்மி.

மூட்டையில் இன்னும் அடியில் இரண்டு பட்டு ஜம்பர்களும், ஒரு பங்களூர் பட்டு ரவிக்கைத்துண்டும் இருந்தன. கீழே சிகப்பு வெல்வெட்டால் தைத்த மடிசஞ்சி. அதற்குள் வெளேரென்றிருந்த ஒரு ஜதை வேஷ்டியும் நீர்க்காவி ஏறிய பழைய ஜதையும் இருந்தன.

காமு பெட்டியைத் திறந்து பார்த்ததும் தான் ஆச்சரியமடைந்து

போனாள். ஒரு நிமிஷம் அதை அப்படியே பார்த்துக் கொண்டே மெய்மறந்து உட்கார்ந்திருந்தாள்.

மேலே நிறைய சிறு சிறு அங்கிகளும், சராய்களும் இருந்தன. பக்கத்தில் இரண்டு மூன்று பிஸ்கோத் பெட்டிகள். அதற்குக் கீழே ஒரு சிறு பெட்டி இருந்தது. அதைத் திறந்தாள். உள்ளே ஸோப், சீப்பு, கண்ணாடி, பௌடர் டப்பி, குங்குமம் இட்டுக்கொள்ள வாஸலின் சீஸா, கலர் குங்குமச்சிமிழ் – வாசனைத்தைல சீஸா – எல்லாம் ஏற்பட்ட இடங்களில் அமைந்திருந்த; அதற்கும் கீழே ஒரு பூப்புடவை – அவ்வளவுதான்.

காமு எழுந்து உள்ளே போய் தட்டு ஒன்று எடுத்துக் கொண்டு வந்து வெற்றிலை பாக்கு முதலியவற்றையும், பங்களூர் பட்டு ரவிக்கையும் வைத்து தாயாரிடம் கொண்டுவைத்து 'அம்மா சந்தோஷமாக எடுத்துக் கொள். மதனி அன்புடன் அனுப்பியிருக்கிறாள்!' என்றாள்.

'இருக்கட்டும். உங்கப்பாவைக் கேள் முதலில் – கலியாணம் ஆகி விட்டதா?'

'நம்மைக் கேட்காமல் கலியாணம் செய்துகொள்வானா அவன்? என்ன கேள்வி? அவன் சொன்னாலும் லலிதா சம்மதிக்கமாட்டாள்! வருகிற மாதம் பரீட்சை முடிந்ததும் கலியாணம்.'

லக்ஷ்மிக்கு உயிர் வந்தது. முகத்தில் சிறிது களை ஏறிற்று. தன் சம்மதமில்லாமல் தன் மகன் ஒன்றும் செய்து விடவில்லை. ஊர்முன் முகத்தைக் காட்டலாம். பிறகு பார்த்துக் கொள்ளுகிறது மற்றதை.

'உங்கப்பாவுக்கு அந்தப் பெண் பிடித்திருக்கிறதாக்கும்!'

'அம்மா, குங்குமம் எடுத்துக் கொள்!'

லக்ஷ்மி குங்குமத்தை இட்டுக் கொண்டாள்.

அப்பொழுது குழந்தை விழித்துக் கொண்டு அழ ஆரம்பித்தான். காமு அவனை ஆனந்தத்துடன் எடுத்துக் கொண்டு 'அட கண்ணு, உன் அத்தை உனக்கு பிஸ்கோத் அனுப்பிச்சிருக்காடா!' என்று ஒரு பெட்டியை உடைத்து ஒரு பிஸ்கோத்தை எடுத்து அவனுக்குக் கொடுத்துவிட்டு 'அப்பா, எல்லாம் சொல்லு!' என்றாள்.

'அம்மா, ஒரே மூச்சில் இப்பொழுதே எல்லாவற்றையும் சொல்ல எனக்கு சக்தியில்லை. ஒவ்வொன்றாக அந்தந்த சந்தர்ப்பத்தில் நினைவுக்கு வந்தபடி சொல்லுகிறேன், அது தான் சாத்தியம்.'

'அண்ணா அவளைக் கலியாணம் செய்துகொள்வதில் .....'

'எனக்கு மனப்பூர்வமான சம்மதம் சொல்லிவிட்டு வந்துவிட்டேன்!'

'ஏன்னா, பெண் நல்லவளா, குலம் கோத்திரம் எப்படி, ஒன்றும் பார்க்க வேண்டாமா?'

'எல்லாம் திருப்தியாக இருக்கிறது.'

'படித்த பெண்ணாச்சே!'

'இருந்தால் என்ன?'

'இருந்தால் என்னவா? என்னடீது உங்கப்பா இப்படிப் பேசுகிறார்?'

'எப்படிப் பேசுகிறார், அம்மா?'

'எனக்கொன்றும் சரியாப்படவில்லை.'

'உனக்கொன்றும் படாது இப்பொழுது. லலிதா – குழந்தை வந்த பிறகு படும்.'

'லலிதா – குழந்தை–அடி காமு, உன்னைக்கூட ஒரு நாளாவது குழந்தை என்றது கிடையாதே! என்னடி காலம்!'

'நல்லகாலந்தான், அம்மா!'

'அப்பாவோடே சேர்ந்து கொண்டு நீயும் குதிக்கிறாய். உன்னை மயக்குவதற்கு என்னமோ அனுப்பியிருக்கிறாள். உங்கப்பாவைப் பார். நாலு நாளில் உடம்பு மினுமினுன்னு ஆயிடுத்தே! இப்பத்தான் பதினாறு வயசுபோலே அங்கே போய் க்ஷவரம் பண்ணிண்டிருக்கார்! கட்டிண்டிருக்கிற வேஷ்டியைப் பாரு!'

'சந்துரு இரண்டு ஜதை வாங்கி வண்ணானுக்குப் போட்டுக் கொடுத்தான்!'

'இப்ப ஏதுக்கு?'

'லலிதா வாங்கச் சொன்னாளாம்.'

'ஊஹூம்! அவ வாங்கச் சொன்னாளா! இன்னும் என்னென்ன செய்யச் சொன்னாளாம்–இவன் செஞ்சானாம்?'

'காமு, உங்கம்மாவை வாயை மூடிண்டிருக்கச் சொல்!'

'இப்பொழுது என்ன அம்மா அவனுக்குக் குறைவு? அபசகுன மாட்டமா ஏதாவது பண்ணாதே! வெற்றிலை போட்டுக்கொள், மத்தியானம் தையல்கார மாமுண்டியைக் கூப்பிட்டு அளவு கொடுத்து ரவிக்கையைத் தைக்கச் சொல்லுகிறேன்!' என்று காமு சொன்னாள்.

'ஏன்னா, சம்மதம் கொடுத்துவிட்டு வந்துட்டேளே, ஊர்லே நாலு பேர் நம்மை என்ன சொல்லுவா?' என்று லக்ஷ்மி அழுகையை நிறுத்திக் கேட்டாள்.

'நாலுபேர் எதற்கும் ஏதாவது சொல்லிக்கொண்டே தான் இருப் பார்கள். நாலுபேரா நாளைக்கு நமது குடும்பத்தின் கஷ்ட நஷ்டங்களை கவனிக்கப்போகிறவர்கள்?'

'ஊரோடே ஒக்கோடே' என்பார்கள். நாளைக்கு நல்லது கெட்ட திற்கு ஊரில் இரண்டுபேர் வரவேண்டாமோ?'

'நாம் செய்வதை அனுமதித்து வந்தால் தாராளமாக வரட்டும். இல்லை–வராவிட்டாலும் அதைக்காட்டிலும் நல்லதுதான்.'

'இங்கிலீஷ் படித்த பெண் குடும்பத்துக்கு ஒத்துவருவாளா? நாற்காலி யைப் போட்டுக்கொண்டு மேஜைக்கு முன்னால் புருஷனுக்குச் சரிசமான மாக உட்கார்ந்து கொண்டு என்னை அதிகாரம் பண்ணுவாள்!'

'அந்த மாதிரி பெண்ணல்ல லலிதா. படித்த பெண்ணாக இருந் தாலும், நம் கிராமாந்திரப் பெண்களிடமில்லாத இங்கிதமும், மரியாதை யும், மனப்பூர்வமான அன்பும் அவளிடம் இருக்கிறது.'

'அதெல்லாம் இப்பொழுது அப்படித்தான் இருப்பாள். கலியாண மாகிற வரையில் காலைப்பிடிப்பாள்....பிறகு....'

'உனக்குத் தெரியாது, உளறாதே!'

'எனக்குத் தெரியாதா? நான் பொம்மனாட்டி–பொம்மனாட்டி குணம் எனக்குத் தெரியாதாக்கும்?'

'உன்னைப் போன்ற பொம்மனாட்டி குணம் உனக்குத் தெரியும், லலிதா உங்களைப்போல அல்ல!'

'இதென்ன எழவுடீது! இந்தப் பிராமணன் இப்படிப் பேசறார்! நாலு நாளிலே அந்த...'

'அம்மா, முட்டாள்தனமாக ஏதாவது வாய்க்கு வந்ததைச் சொல்லாதே! அப்பா ஒன்றும் அவசரப்பட்டு முடிவு செய்யமாட்டார்!' என்று காமு தாயரைக் கண்டித்தாள்.

'என்னடீது நீயும் சேர்ந்துண்டு குதிக்கறே? பெரியவளான பொண்– இருபது வயதாவது இருக்காதோ? – அதைப்போயி கூட்டிண்டு வந்தா ஊர் சிரிக்காதோ?'

'அதெல்லாம் இப்பொழுது தான் சர்வசாதாரணமாயிற்றே அம்மா?'

'சாதாரணமாவது! நம்ம ஆத்துலே இதுவரையிலும் இந்தமாதிரி உண்டோ? எனக்கு கலியாணத்தின்போது என்ன வயது தெரியுமா?'

'அந்தக் காலமெல்லாம் போச்சு!'

'ஆமாம், காமு, உங்கம்மா பேசுகிறாளே, இந்த ஊரில் கலியாண மாகாமல் பெரிதாகி எத்தனை பெண்கள் இருக்கின்றன, கேள்!'

'கனபாடிகள் பேத்திக்கு வயது பதினெட்டு ஆகிறது.'

'அந்தமாதிரி இது?' என்று லக்ஷ்மி மழுப்பினாள்.

'பின் எந்தமாதிரி? அதே மாதிரிதான்–யுகதர்மம் தானாக அந்தமாதிரி மாறிவிட்டது. அதை எந்தக் கட்டுப் பாட்டாலும் தடுக்கமுடியாது. தடுத்து நின்றால் நமக்குத் தான் கஷ்டம், அவமானம், துக்கம்!' என்று சொல்லிவிட்டு ராமஸ்வாமி சாஸ்திரிகள் காவேரிக்குப் போவதற்காக எழுந்திருந்தார்.

'அந்தப் படுபாவிப் பொண் நாலு நாளும் பசப்பிக் கள்ளித்தனமாகச் செய்த உபசாரத்தில் உங்கப்பா மயங்கிப் பேட்டார். இது ஏதோ அனர்த்தத்துக்குத்தான் வந்திருக்கு– எனக்குத் தெரியும். தாலி கழுத்தில் ஏறினதும் அது சொரூபத்தைக் காட்டப்போகிறது. இல்லாவிட்டால் படித்த பெண் எங்கேயாவது ஸ்னானம் செய்துவிட்டு மடியாக சமையல் செய்து போடுமா? எங்கேயாவது உண்டா?'

'நான்தான் பிரத்தியக்ஷமாகப் பார்த்து அனுபவித்து விட்டு வந்திருக்

கிறேனே, வேறு பிரமாணம் எதற்கு?'

'அதான் சொன்னேனே-வேஷம்-காரியம் ஆகிற வரையில் வேஷம். நிலைத்து அந்தப்பெண் குடும்பம் நடத்தமாட்டாள். ஆம்படையானைக் கூட்டிக்கொண்டு எங்கேயாவது போய்விடுவாள். சாகிற காலத்திலே...'

'அப்படியெல்லாம் கட்டுக்கடங்காத பெண் அல்ல லலிதா. நல்ல வமிசம். தமையன் தஞ்சாவூரில் பெரிய வக்கீல். தாயார் இருக்கிறாள்...'

'பெத்தவள் இருந்துகொண்டா பெண்ணை இந்த மாதிரி விட்டிருக் கிறாள்?'

'எந்தமாதிரி விட்டிருக்கிறாள்?'

'ஆனால் உங்களுக்கு இந்தப் புதுமாதிரியெல்லாம் இப்ப பிடிச்சுப் போச்சா?'

'பிடித்துப் போவது என்றால் என்ன? நீ சொல்வதில் அர்த்தமில்லை. நமக்குப் பிடித்தாலும், பிடிக்காவிட்டாலும் நம்மையும் மீறி சமூகத்தில் மாறுதல்கள் ஏற்படுகின்றன. இங்கிதமாக அவற்றை அனுசரித்துப் போவதுதான் சிலாக்கியம்.'

'அதற்காக செய்யத் தகாததையெல்லாம் செய்துவிடுகிறதா என்ன?'

'செய்யத்தகாதது என்ன இருக்கிறது இங்கே? சந்துரு லலிதாவைக் கலியாணம் செய்துகொள்ள ஆசைப் படுகிறான். அவளும் அவனிடம் மனம் வைத்திருக்கிறாள். பரம பிரீதியோடும் அன்போடும் அவனுக்கு எல்லாம் செய்கிறாள். நான் பார்த்துவிட்டேன். அவ்வளவுதானே முக்கியம்?

'அவனுக்கு செஞ்சூட்டா போருமா? குடும்பத்துலே வந்து மாமியார், மாமனார்....'

செய்வாள் நிச்சயம். ஆனால் அதற்காகத்தானா பிள்ளைக்குக் கலியாணம் செய்வது? அவன் சுகமாக இருப்பதுதானே லட்சியம்?'

'அவன் சுகமாக இருக்க வேண்டியதுதான் - அது தான் என்ன நிச்சயம், யார் கண்டார்கள்? - நாமெல்லாம் காவேரியில்போய் விழுந்து விடுகிறதா?'

'காவேரியில் விழவேண்டாம். பேஷாக வீட்டில் விச்ராந்தியாக இருக்கலாம். காலை நீட்டிக் கொண்டு உட்கார்ந்து அனுபவிக்கலாம்.

'ஆமாம், நான் காலை நீட்டிக்கொண்டு உட்கார்ந்து-நாசமாகப் போனேன்-மரியாதையாக சோறு கிடைத்தால் போதாதா?'

'எல்லாம் நீ நடந்துகொள்வதில் இருக்கிறது. எப்பொழுது நம் பையன் கையைப் பிடித்துக்கொண்டு இந்த வீட்டில் நுழைகிறாளோ அவளுக்கு இங்கே உரித்தான சுதந்திரம் இருந்துவிட்டால் ஒரு கஷ்டமும் இல்லை. பாரத்தை அவள் தலையில் போட்டு பொறுப்பைக் கொடுத்தால் தானாக ஏற்று நடத்துவாள்!'

'சரியாப்போச்சு. வந்த அன்றே கொடுத்துவிட்டால் அப்புறம்

ஒன்றும் வேண்டாம். நீங்களும் நானும் செம்பை எடுத்துக்கொண்டு ...!'

'சீ முட்டாளாகப் பேசுகிறாய்! உன்னுடன் யார் பேசுவது? உரியவளுக்குப் பொறுப்புக் கட்டுவதால் உன் அதிகாரம் போய்விடும் என்று நீ நினைத்தால்தான் வந்து சேரும் சங்கடம்.'

'சரி, நீங்கள் என்ன வேண்டுமானாலும் பண்ணிக்கொள்ளுங்கள். என்பேரில் நாலுமா நிலம் எழுதிவைத்து விடுங்கள். காமுவுக்கு ஏதாவது இப்பவே செய்துவிடுங்கள்...'

'அம்மா, நீ எனக்காக ஒன்றும் சிபார்சு செய்யவேண்டாம்!' என்று காமு சிரித்தாள்.

'போடி பைத்தியமே! இன்னிக்கு நான் சொல்றது உனக்கு கேலியாக இருக்கும். நாளைக்குத் தெரியும் எல்லாம். அவள் கை வலுத்துவிட்டால் அப்புறம் நீயும் நானும் என்ன பண்ணிக்கக் கிடக்கு?'

'அப்படிப் போனால் போகட்டும், போ! அண்ணாவே பார்த்து அப்படிச் செய்துவிட்டால்....'

'அண்ணா–அப்பாவி–அவன் என்னடீ பண்ணுவான்? அவளுக்குப் பயப்படுவானா, உனக்கு பயப்படுவானா? அவனுக்குச் சோறு கிடைக்க வாண்டாமோ?'

'சோறு சோறுன்னு சாகிறாயே அம்மா, அதுதானா முக்கியம்? நாய் கூடத்தான்....'

'ஆமாண்டி நான் சாகிறேன். ஒருவேளை சாப்பிடாமல் இரு பார்ப்போம். எல்லாம் நான் சொன்னால் அப்படித் தான் இருக்கும் உங்களுக்கு. பட்டால்தான் தெரியும் பாப்பானுக்கு. எப்படியோ ஒழிந்து போங்கள், எனக்கென்ன? எனக்குக் காலம் வரமாட்டேங்கறது! போன மார்கழிலே படுத்த படுக்கையாகக் கிடந்தேனே, போயிருக்கப்படாதோ, இதையெல்லாம் பார்க்காமல்?'

ராமஸ்வாமி சாஸ்திரிகள் வாயை மூடிக்கொண்டு இருந்தார். அவரால் தாங்கமுடியவில்லை.

'பின் அவனுக்குக் கல்யாணம் பண்ணவேண்டுமென்று எதற்காகக் கதறுகிறாய்?'

'கல்யாணம்னா இப்படியா? பஜாரியைக் கொண்டு வந்தா?'

'எவள் வந்தாலும் உன் மனதுக்கு அப்படித்தான் தோன்றும். இன்னிக்கி கல்யாணம் பண்ணச்சொல்லி பிராணனை வாங்குகிறது. நாளைக்கு அந்தப் பெண் வந்தால் அதன் பிராணனை வாங்குகிறது–இதே தொழில் உலகத்தில்–இல்லை, நம்ம ஜாதியில்.'

'அப்பா, நீங்கள் சொல்லுவது நிஜந்தான். ஏன் அப்படி ஆகிறது? எங்காத்தில் பார்–இதேதான். என்னைக் கண்டாலே ஆகவில்லை என் மாமியாருக்கு–நான் என்ன செய்தேன்?' என்றாள் காமு.

'அதான் சொன்னேனே! நீ ஒன்றும் செய்யவேண்டாம். வீட்டிற்கு

வந்தாலே போதும்.'

'அப்படியும் உங்கள் மாப்பிள்ளை ஒன்றும் அளவு மீறி....' என்று சொல்லி நிறுத்திக்கொண்டாள்.

'அப்படி இருந்தாலே அசூயை. தம்பதிகள் அன்னியோன்னியமாக வேறு இருந்துவிட்டாலோ தொலைந்தது.'

'ஒன்றுமில்லை அப்பா, நான் இங்கே வருகிறபொழுது அவர்...'

'எல்லாம் எனக்குத் தெரியும், அம்மா! உன் அனுபவத்தைப் பார்த்த பிறகுதான் எனக்கும் தெரிந்தது. இந்தப் பிராமண சமூகம் ஒரே நிலைமை யில் வெகுகாலம் ஒரு மாறுதலும் இல்லாமல் இருந்துவிட்டதால் பக்குவம் தவறி அழுகிப் போய்விட்டது. ஒன்றிலாவது நேர்மை கிடையாது, தூய்மை கிடையாது, உயர்வு கிடையாது. உள்ளத்தில் ஒன்று, வாக்கில் ஒன்று. அந்தரங்கசுத்தி கிடையாது, அம்மா! அதுதான் இந்தக் கஷ்டங்களுக்கு எல்லாம் காரணம்.'

'உங்களுக்கும், உங்கள் நாட்டுப்பெண்ணுக்கும் அந்த ரங்கசுத்தி இருக்கோல்லியோ, போதும்!' என்றாள் லக்ஷ்மி அம்மாள் குத்தலாக.

'உனக்கும் தெரியாது, சொன்னாலும் கேட்கமாட்டாய்!'

'இனிமேல்தான் தெரியவேண்டும். உங்கள் லலிதா வந்து எனக்குச் சொல்லித்தர வேண்டும்–அப்படித் தானே?'

'உன்னோடு யார் பேசுவார்கள்?'

'என்னோடு எதற்காகப் பேசவேண்டும் இனிமேல்? மாட்டுப்பெண் வருகிறாள். பேசுங்கள் அவளுடன் நிறைய!'

ராமஸ்வாமி சாஸ்திரிகளுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்தது. ஆனால் அடக்கிக் கொண்டார். துக்கத்துடன் புன்னகை செய்துகொண்டு கூடத்தைவிட்டு நகர்ந்துகொண்டே, 'உனக்குத் தெரிந்தது அவ்வளவு தான். உன் தலைமுறைக்குத் தெரிந்தது அவ்வளவுதான். உன்னை மாற்றமுடியாது. உன் தலைமுறை மாறின பிறகு எல்லாம் சீர்படும்!' என்றார்.

'காமு, பார்த்தியோல்லியோ உங்கப்பா பேசுகிறதை! 'நீ ஏன் இருந்து கழுத்தறுக்கிறாய்?' என்கிறார். போருமோல்லியோ என் ஜன்மத்துக்கு? இப்பவே ஆரம்பிச்சூடுத்து, பார்த்தியோல்லியோ? இன்னும் தாலி கட்டியாக வில்லை!' என்று லக்ஷ்மி அம்மாள் ஆரம்பித்தாள்.

'அம்மா, யோசிக்காமல் நீ என்னென்னமோ பிதற்றுகிறாய்?' உனக்கு எப்படி சமாதானம் சொல்வது?' என்றாள் காமு, சற்று இரக்கத்துடன்.

'சமாதானமும் வேண்டாம், ஒன்றும் வேண்டாம். என் ஜோலிக்கு வராமலிருங்கள் போதும்!' என்று லக்ஷ்மி அம்மாள் பொறுமினாள்.

★★★

'லலிதா இங்கே வா!' என்று கத்தினான் சந்திரசேகரன் சமையலறைப்

பக்கம் பார்த்து.

'எதுக்காம், சொல்லுங்கள் முதலில், வருகிறேன்' என்று லலிதா அங்கிருந்தே பதில் சொன்னாள்.

'வந்தால்தான் சொல்லுவேன்!'

'சொன்னால்தான் வருவேன்.'

'வருகிறாயா இல்லையா இப்பொழுது?'

'வராவிட்டால் என்ன செய்வீர்களாம்?'என்று கொஞ்சிக்கொண்டே லலிதா மெது நடை நடந்துகொண்டு வந்தாள்.

பாதி வழி வந்தவள் சந்திரசேகரன் கையில் பிரித்த கடிதம் ஒன்று இருப்பதைக் கண்டதும் ஓடிவந்தாள்.

சந்திரசேகரன் கடிதத்தைச் சட்டென்று மூடிக்கொண்டு 'ஒன்று மில்லை என்ன செய்கிறாய் என்று பார்த்தேன். கைக்காரியமிருந்தால் போ!' என்றான்.

லலிதா கொடிபோல வளைந்து சந்திரசேகரன் முதுகு மேல் சாய்ந்து 'யார் எழுதியிருக்கிறார்கள்?' என்று ஆவல் பொங்கக் கேட்டாள்.

'என் சிநேகிதன்!'

'சொல்லுங்கள்!'

சந்திரசேகரன் திரும்பி அவள் முகத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே 'வந்தாயா வழிக்கு? கூப்பிட்டதற்கு நிரம்ப அழுத்தம் செய்து கொண்டாயே! கூப்பிட்டால் வருகிறேன் என்று சொல் முதலில்?'

'எதற்கு என்று சொல்லிக் கூப்பிட்டால் வருவேன். கண் ஏன் சிவந்திருக்கிறது? நெற்றியில் ஏன் வியர்வை, புடவைத் தலைப்பு ஏன் ஈரம் என்பதற்கெல்லாம் பதில் சொல்ல ஒருத்தி வருவாளாக்கும்?'

'ஆமாம், வேலை ஆயிற்றா இல்லையா? பெரிய கடிதம், நாழியாகும் படிப்பதற்கு?'

'வேலை ஆய்விட்டதே!'

'பின் இப்படி உட்கார்!' என்று சந்திரசேகரன் அவளை இழுத்து மடியில் உட்காரவைத்துக் கொண்டான்.

'யாராவது வரப்போகிறார்களே!'

'வாசற்கதவைத் தாளிட்டுவிட்டேன், தடங்கல் இல்லாமல் படிக்க வேண்டுமென்று. படிக்கட்டுமா?'

'படியுங்கள்!'

'திருவெழுந்தவூர்'

'குழந்தை சௌபாக்கியவதி லலிதாவுக்கும் சிரஞ்சீவி சந்துருவுக்கும் அநேக ஆசீர்வாதம். உபயக்ஷேமம்.'

'அப்பாவா!'

'ஆமாம், நீ முக்கியமாகப் போய்விட்டாய்...நீ...'

'படியுங்கள்!'

'நான் சௌக்கியமாக இங்கே வந்து சேர்ந்தேன். காமுவுக்குப் பரம திருப்தி. சந்தோஷம். உன் தாயார் தான்–என்ன சொன்னாலும் சமாதானப் படமாட்டேன் என்கிறாள். ஆனால் நான் தீர்மானம் செய்தது செய்தது தான். ஊரிலும் கொஞ்சம் சங்கடப்படுத்துவார்கள் போலிருக்கிறது.'

'அம்மா ஏன் என்மீது இவ்வளவு சந்தேகப்படுகிறார்கள்?' என்று லலிதா துக்கக் குரலுடன் சொன்னாள்.

'அம்மா எடுப்பார் கைப்பிள்ளை என்பார்களே அது மாதிரி. ஊரில் பொழுது போகாத இரண்டு பாட்டிகள் தூபம் போட்டிருபப்பார்கள்; குதிக்கிறாள். அவ்வளவுதான், எல்லாம் சரியாகப் போகும்.'

'அப்படி நினைக்காதீர்கள். எனக்குத் தெரியும். மனதில் பட்டு விட்டதை மாற்றுவது கடினம். சரி மேலே!'

'கலியாணத்தை நடக்க விடுவதில்லை என்று கட்சிகட்டிக் கொண்டிருக்கிறார்கள். நம் சாமித்துரையே எதிர்க்கிறான். நான் என்ன சொன்னாலும் அவனுக்கு ஏறவில்லை. கலியாணம் நடந்தால் பண்ணையைவிட்டு விலகிவிடுவதாகச் சொல்லுகிறான். அவனைப் பட்டணத்துக்கனுப்பலாமென்று இருக்கிறேன்.'

'அவன் என்ன அவ்வளவு முக்கியஸ்தன், அப்பா அவ்வளவு கவலைப்பட?' என்றாள் லலிதா.

'எங்கள் பண்ணையில் அவன் சிறு பயலாக நுழைந்தவன். எங்கப் பாவும், அவனும் ஒரு வயதுக்காரர்கள். அவனைக் கேட்காமல், அவனை மீறி அப்பா இதுவரையில் ஒன்றும் செய்தது கிடையாது. வீட்டு விவகாரங்கள் முழுவதும் அவன்தான். அப்பாவையே சில சமயங்களில் அதர வடித்துவிடுவான். ஆனால் அவன் சொல்வதிலோ, செய்வதிலோ பிசகு இருக்காது. கையெழுத்து போடத் தெரியாது அவனுக்கு. ஆனால் அவனுக்கு இருக்கிற யோசனை யாருக்குமிருக்காது. இங்கே வந்தால் பரிதாபப்பட்டுப் போவான். நீ இரண்டு வேளை சாதம் போட்டா யானால் போதும். அம்மாவையும் அனுப்பச் சொல்லட்டுமா?'

'வேண்டாம் இப்பொழுது வேண்டாம். அம்மாவை மாற்றுவது அவ்வளவு லேசல்ல. இப்பொழுது வந்தால் ஆபத்து. அப்புறம்?'

'இந்த ஜாதியின் ஊழல்தான் என்ன என்கிறாய், லலிதா! இது எனக்கு இதுவரை புலப்படவில்லை. படித்தவரர்களை நவ நாகரீகக் கசடு என்று நான் நினைத்திருந்தேன். அந்த கோஷ்டியில் உன்னைக் கண்ட பிறகு தான், நான் குற்றமற்றது என்று எண்ணி இருந்த இந்த ஜாதியிலும் கசடு இருக்கும் என்று எனக்குத் தோன்றிற்று. யோசித்துப் பார்க்கிறேன்– அப்படித்தானிருக்கிறது. பிராமண சமூகத்துக்குப் பெரியோர்கள் வகுத்த விதிகள் இனி உபயோகப்படாது என்பதை நிதர்சனமாகக் காண்கிறேன். யாரும் அவற்றை அனுஷ்டிப்பதில்லை. அனுஷ்டிப் பதாக, கட்டுப்பாடாக பாவனை செய்கிறார்கள்; அவ்வளவுதான்.

'சாரதா சட்டம் கூடாது என்று பிரமாதப் படுத்தினார்கள். இப்பொழுது ஊரில் நூற்றுக்கு தொண்ணூறு பெண்கள் கலியாணமாகாத வயது வந்த பிரௌடைகள். விதவாவிவாகம் கூடாது என்கிறார்கள். எதிர் வீட்டு சாஸ்திரிகள் மைத்துனி பெண் – விதவை – இதே ஊரில் தைரியமாக ஒரு பள்ளிக்கூட உபாத்தியாயருடன் தனிக் குடித்தனம் செய்கிறாள். அவளை யார் என்ன செய்துவிட்டார்கள்? இன்னும் எவ்வளவோ இதுமாதிரி. கோடி வீட்டு ராமு வாத்தியார் பேத்தி விதவை – மாயவரத்தில் இருக்கிறாள் – வீட்டை விட்டு வெளியே ஜாதி என்ன செய்தது? என்ன செய்ய முடியும்? இதெல்லாம் விதிவிலக்கு. ஜாதியில் இப்படிச் சில இருக்கத்தான் செய்யும், எந்த ஏற்பாட்டிலும் இது உண்டு என்றெல்லாம் இதுவரை நான் என்னையே திருப்தி செய்து கொண்டிருந்தேன். காலப் போக்கை அங்கீகரிக்கவும் அனுசரிக்கவும் மனதும் தைரியமும் இல்லாமல் இத்தனை நாள் எல்லாம் சரியாக இருக்கிறது என்று இருந்தேன். எதனாலோ, லலிதா, உன்னைப் பார்த்த பிறகு என் மனம் முற்றிலும் மாறிவிட்டது. ஒன்றும் சரியாக இல்லை என்ற எண்ணம் ஏற்பட்டு விட்டது. இப்பொழுது கண்ணில் படும் ஒவ்வொன்றும் அதை ஊர்ஜிதப்படுத்துகிறது. பட்டவர்த்தனமாகத் தென்படும் உண்மைகளை மறைத்து வேஷம் போடுவதில் லாபம் என்ன? எவ்வளவு நாள் தான் அப்படிச் செய்ய முடியும்? செய்தால்தான் பழைய நிலைமை வரப் போகிறதா? பெண்கள் சினிமாவுக்குப் போவதைத் தடுக்க முடியுமா இனிமேல்? பதினாறு முழம் பூப்புடவை கட்டுவதை நிறுத்த முடியுமா? பிரவாகம் கரை புரட்டிக் கொண்டு வருகிறது. யாரால் அணைபோட முடியும்? பழையதை ஆதரிக்கும் பிரகிருதிகளுக்கே அவற்றில் நம்பிக்கை யில்லை; அதுதான் சூக்ஷமம் இங்கே! தெய்வ சாபம் – பிதிரு சாபம் – என்ற நம்பிக்கைகள் தகர்ந்து போய் விட்டன. பிறகு பழைய முறை களுக்கு ஆதாரம் எங்கிருக்கிறது?'

சந்திரசேகரன் கடிதத்தைக் கீழே வைத்துவிட்டு லலிதாவின் முகத்தைப் பார்த்தான். அது உணர்ச்சிப் பெருக்கில் ரத்தம் சுரந்து பளபளவென்று ஜொலித்துக் கொண்டிருந்தது.

'லலிதா, அப்பாவா இப்படியெல்லாம் எழுதியிருக்கிறார்-சொல்லி காமுவை எழுதச்சொல்லி இருக்கிறார்! இது என்ன விபரீதமாக இருக்கிறது?'

'விபரீதம் எங்கே இருக்கிறது? உண்மையை தைரியமாக எழுதி இருக்கிறார்'.

'எனக்கு நம்பிக்கையில்லை. எனக்கு பயமாக இருக்கிறது. அப்பா இப்படி மாறமாட்டார். ஆகையால் அவர் நம் கலியாணத்திற்கு சம்மத மளித்ததே எனக்கு இப்பொழுது சந்தேகமாக இருக்கிறது. புத்தி சுவாதீனமில்லாமல் போயிருக்க வேண்டும். லலிதா, நிதானமாக நாம்

யோசிக்க வேண்டும்'.

'நாமா?' என்று தூக்கி வாரிப்போட்டது போலக் கேட்டுக்கொண்டு லலிதா அவன் மடியிலிருந்து எழுந்து அவன் பக்கம் திரும்பி, அவன் முகத்தைச் சற்று திகிலுடன் கவனித்தாள்.

'ஆமாம், லலிதா, நாமும்தான்! இதெல்லாம் ஏதோ ஒரு கனவு போல எனக்குத் தோன்ற ஆரம்பித்துவிட்டது இப்பொழுது. காலேஜில் படிக்கும் பெண் வீட்டில் அடுப்பு மூட்டி சமையல் செய்வதும், மாமனார் என்று வரப்போகும் வைதிகருக்கேற்றபடி நடந்துகொள்வதும், அந்த வைதிகரும் அந்தப் பெண்ணை அங்கீகரிப்பதும் – இதெல்லாம் நிரந்தரமாக நடக்கக்கூடிய விஷயங்களா என்று எனக்கு இப்பொழுது சந்தேகம் தட்ட ஆரம்பித்து விட்டது'.

'எதனால் இப்பொழுது திடீரென்று?'

'அதான் சொன்னேனே. அப்பா இந்த மாதிரி வெகு சுலபமாகத் தன் கொள்கைகளை மாற்றிக் கொண்டதால்'.

'அதில் எனக்கு ஒன்றும் தோன்றவில்லையே! வெகு இயற்கையாக வல்லவோ அவர் நடந்துகொண்டார்'.

'நீ... உன் போக்கு இயற்கையாக உனக்குத் தோன்றுகிறதா?'

'நிச்சயம்... இயற்கைதான்... நானே யோசித்துப் பார்த்துவிட்டேன்'.

'உன் படிப்பு...'

'என் படிப்பு அதற்கு ஆதாரமாகத்தான் இருக்கிறது. கண்மூடித் தனமாக நமது பெரியவர்கள் அனுஷ்டித்துவரும் சில பழக்கவழக்கங்கள் உண்மையில் வெகு சிறந்தவை என்பது என் படிப்பினால்தான் தெரிந்தது'.

'உதாரணமாக?'

'உதாரணமாக? ஒன்றிரண்டு போதுமா? பெண்களுக்கு உயர்தரக் கல்வி, ஆண்பிள்ளைகளைப் போல, அளிப்பது அனாவசியம் மட்டு மல்ல, கெடுதல் என்று எனக்குத் தெரிகிறது'.

'ஓகோ, அப்புறம்?'

'ஆண்களும், பெண்களும் சேர்ந்து படிப்பது கலையுணர்ச்சி, அழகுணர்ச்சி, பெண் தன்மை-இவற்றின் சர்வநாசத்திற்கு மூலம் என்றும் எனக்குத் தெளிவாகிறது'.

'அடேடே, இதென்ன சுத்த பிற்போக்கு மனப்பான்மையல்லவா இது?'

'உண்மையில் உணர்ந்து சிந்திக்கும் எந்தப் படித்த பெண்ணும் இந்த முடிவுக்குத்தான் வருவாள்-நிச்சயம். பிற்போக்கோ, முற்போக்கோ எனக்குத் தெரியாது.

'பெண்களுக்கு உயர்தரக் கல்வி வாழ்க்கையில் லவலேசம்கூட உபயோகமில்லை, பார்க்கிறேன். உபயோகமாக இருப்பதற்கு பதிலாக

வாழ்க்கையில் சாதாரணமாக எதிர்பார்க்கக்கூடிய ரஸங்கள் போதா என்ற அதிருப்தியை ஏற்படுத்தி, உள்ளத்தை வெகுசுலபமாக சாந்தப் படுத்தி, ஏமாற்றும் குறுக்கு எண்ணங்களையும் உற்பத்தி செய்கிறது. அதனால் வாழ்க்கை இன்பமாவதற்கு பதிலாக இடையற்ற கவலையும் சூதும் நிறைந்த நரகமாக ஆகிறது. It compromises the conscience'.

'இந்த ஆபத்து ஆண்களுக்கும்தான் இருக்கிறது'.

'அவர்களுக்கு இருப்பதால் பெண்களுக்கும் ஏற்பட வேண்டுமா? மேலும் அப்படி இருக்கிறது என்ற காரணத்தாலேயே அது பெண்களுக் காவது ஏற்படாமல் தடுக்க வேண்டாமா? எல்லாப் பாடும் எதற்காக? வாழ்க்கை சரிவர நடைபெறத்தானே?'

'அறிவுத் தாகம் பெண்களுக்கும் இருக்காதா?'

'அறிவுத் தாகம் யாருக்கும் முற்றிலும் எப்பொழுதும் சாந்தி ஆகாது. ஆகையால் அது பிரச்சினை இல்லை. பிள்ளை பெறும் பொறுப்பு என்ற ஒரு பாரம் பெண்ணிடம் இருக்கும் வரையில், அவள் ஆண்பிள்ளை போல எதிலும் தலையிட முடியாது. ஆண்பிள்ளையின் லட்சியங்கள் எல்லாம் அவளுடைய லட்சியங்கள் ஆக முடியாது. சிலதான் அவளுக்கும் ஏற்றவையாக இருக்கமுடியும்'.

'பெண் சுதந்திரம்?'

'நீங்கள் வேண்டுமென்றுதான் என்னைக் கிளறிப்பார்க்கிறீர்களா, அல்லது உண்மையாகவே சந்தேகம்தானா?'

'பெண்களுக்கு சுதந்திரம் வேண்டும் என்பதில் எனக்கு நம்பிக்கை உண்டு'.

'எதில்?'

'எதிலா? அதாவது... முன்போல இல்லாமல்... இனிமேல்-ஏன் நீ அது என்ன என்று அறிந்துகொள்ளவில்லையா?'

'நீங்கள் அறிந்துகொண்டு விட்டீர்கள் அல்லவா?'

'ஆ! இந்த நிமிஷம்தான் முற்றிலும் அறிந்தேன். நீ ஏன் என்னை 'நீங்கள்' என்று சொல்லவேண்டும். நான் மட்டும் ஏன் உன்னை 'நீ' என்று சொல்லலாம்?'

'நீங்கள் கேட்கும் கேள்விக்கு பதில் நானும் சரியாக கேள்வி கேட்க முடியும். ஆனால் அதெல்லாம் உண்மையை ஒப்புக்கொள்ளச் செய்ய உபயோகப்படாது'.

'இல்லை, அந்தக் கேள்வியின் பதிலில் தொக்கி இருக்கிறது பெண் சுதந்திரத்தின் பொருள்'.

'அதில் இல்லை. 'ந ஆத்ரீ ஸ்வாதந்திரியம் அர்ஹதி' என்றால் பெண் சுதந்திரத்திற்கு லாயக்கில்லை என்பது அர்த்தமல்ல. சுதந்திரமாக இருக்க பெண்ணால் முடியாது என்பதுதான் பொருள்'.

'ஏன் இருக்கமுடியாது?'

'அதான் சொன்னேனே, பெண் பெண்ணாக இருக்கிறவரையிலும், உலகமும் இதேமாதிரி இருக்கும் வரையிலும் பெண்ணால் சுதந்திரமாக இருக்க முடியாது'.

'மேலை நாடுகளில்...'

'என்ன, நீங்கள் கூடவா இப்படி வாதம் செய்கிறீர்கள்? அது கிடக்கிறது. நம்மையே ஆராய்ச்சி செய்து கொள்ள வேண்டும் என்றீர்களே, என்ன விஷயம்?'

'உண்மையாகச் சொல், லலிதா, ஆயுள் பரியந்தம் இந்த மாதிரி உன்னால் என்னுடன் இருக்கமுடியுமா?'

'உங்களுடன் இருக்க வேண்டுமென்று நான் விரும்பினால் இப்படித்தான் இருக்க வேண்டும்'.

'நிர்பந்தமாகவா?'

'நிர்பந்தம் என்றால் என்ன? எதில் நிர்பந்தமில்லை, சொல்லுங்கள்?'

'தத்வாராய்ச்சி அல்லவா அது?'

'அதுதானே மூலாதாரம்! தர்க்கரீதியாகப் பேசட்டுமா?'

'வேண்டாம். ஆனால் இந்த வாழ்க்கை உனக்குப் பிடித்திருக்கிறதா?'

'ஆராய்ந்து பார்த்தால் பிறப்பில் தாய்ப்பாலைத் தவிர வேறென்ன முதலில் பிடிக்கிறது? பிறகு நிர்ப்பந்தத்தால்-அதாவது பழக்க வழக்கங்களால் எல்லாம் பிடித்துவிடுகிறது'.

'லலிதா, லலிதா, என்னை மிஞ்சிவிட்டாயே வேதாந்தத்தில்?'

'மிஞ்சுவதென்ன இருக்கிறது, இதுதானே விஷயம்?'

'ஆமாம், ஆண்களும் பெண்களும் சேர்ந்து படிக்கக் கூடாது என்றாயே, அந்த அபிப்பிராயம் எப்பொழுது முதல் உனக்கு?'

'உங்கள் அபிப்பிராயம் என்ன?'

'என் அபிப்பிராயமா? யோசித்துச் சொல்கிறேன். ஆனால், அதில்லாவிட்டால் நீயும் நானும் எப்படி சந்தித்திருக்கமுடியும்?'

'இப்படி உபயோகமில்லாமல் பேசிக்கொண்டிருந்தால் காரியம் ஆனாற்போலத்தான்!' என்று சொல்லிக்கொண்டு லலிதா சமையலறைப் பக்கம் திரும்பினாள்.

'இந்தா, லலிதா, காரியம் வாழ்க்கை பூராவும் செய், வேண்டமென்று சொல்லவில்லை. முதலில் மனதை வெளுத்துக் கொள்வோம், சற்று வா, இங்கே!' என்று சந்திரசேகரன் கவலை தோய்ந்த முகத்துடன் சொன்னான்.

'திருப்பித் திருப்பி என்ன இருக்கிறது? நான் சொல்ல வேண்டியதையெல்லாம் சொல்லிவிட்டேன், முழுவதும் உங்கள் அபிப்பிராயங்களும் எனக்கு அறிமுகமானவைதான்'.

'இல்லை, அவ்வளவு லேசாக இதைத் தீர்த்துக் கட்டிவிடக்கூடாது என்று நினைக்கிறேன். இருந்தாலும், நீ இப்பொழுது வேலையிருந்தால்

பார், மாலையில் கடற்கரைக்குப்போய் தனியாக உட்கார்ந்து கொண்டு பேசுவோம்!'

அன்று காலேஜ் கிடையாது. இருவரும் சாப்பிட்டு விட்டு தனித் தனியாக ஏதோ புத்தகங்களைப் படித்துக் கொண்டிருந்தார்கள்.

சுந்தரம் வந்தான்.

'என்னடா, சுந்தரம், அத்திப்பூத்தாப் போல! ஒரு வேளை ஹாஸ்ட லுக்குப்போய் தேடிப்பார்த்து விட்டு இல்லை என்று போய் விடு கிறாயோ? இங்கே நான் இருப்பது...'

'காலேஜில்தான் சந்திக்கிறோமே!'

'அதுதான் இருக்கிறதே! ஏன், என்ன சமாசாரம்? என்ன ஒரு மாதிரி யாக இருக்கிறாய்? என்ன லலிதா, சுந்தரம் சுரத்தாக இல்லையல்லவா?'

'எனக்கென்ன தெரியும் உங்கள் சிநேகிதர் சமாசாரம்?' என்று லலிதா சிரித்த வண்ணம் சொல்லிவிட்டு காபி போடுவதற்காக எழுந்தாள்.

'சுந்தரம், அன்று ஏதோ கவலைக்கிடமான வகையில் சூசனையாகச் சொல்லிவிட்டுப் போனாயே, என்ன விசேஷம்?'

'உனக்குத் தெரியாதா? மிஸ் லலிதாமூலம் தகவல் வந்திருக்குமே!'

'வரவில்லை, நிஜமாக, சொல்லு!'

'அன்றேதான் சொன்னேனே! சுலோசனா விஷயம்.'

'ஆமாம், ஏன் அந்தமாதிரி நடக்கமுடியாது என்று நினைக்கிறாய். அவள் உன்னிடத்தில் ஈடுபட்டிருக்கிறாள் என்பது பட்டவர்த்தனமாகத் தெரிகிறது. உனக்குப் பிடிக்கவில்லையா?'

'பிடிக்கவில்லை என்பதல்ல. ஆனால் எங்கள் இருவருக்கும் ஒத்துக் கொள்ளாது.'

'ஏன் ஒத்துக்கொள்ளாது? இப்பொழுதே எப்படிக் கண்டுபிடித்தாய்?'

'கேவலம் பொருளாதார விஷயம்தான்.'

'உனக்குச் சொத்து இல்லை என்பதாலா?'

'அவளுக்குச் சொத்து இருக்கிறது என்பதால்!'

'அப்படி ஏது சொத்து? அவள் தகப்பனார் சாதாரணம்தானே? அவள் தமக்கைகூட எங்கள் ஊரில் வாழ்க்கைப் பட்டிருக்கிறாள்–அப்படி ஒன்றும் பிரமாதமாக இல்லையே!'

'அவள் சிற்றப்பன் ஒருவர் பொழுதுபோகாமல் பல ஆயிரங்களை பாங்கில் சேர்த்து வைத்திருக்கிறாராம். அவை சுலோசனாவுக்கு வருகிறது கலியாணத்தின்போது!'

'வரட்டுமே தாராளமாக! அதனால் என்ன?'

'என்ன சந்துரு, நீயே இப்படிப் பேசுகிறாய்? நான் ஏழையாகவும், அவள் பணக்காரியாகவும் இருந்தால் சரியாக வருமா? ஏழையென்ற நினைப்பே என்னை உறுத்திக் கொண்டேயிருக்கும்; பணமிருக்கிறது என்ற நினைப்பே அவளை கர்வத்திற்குள்ளாக்கிக் கொண்டிருக்கும்.'

'சேச்சே, சுலோசனா அப்படிப்பட்ட பெண் அல்ல!'

'சந்தர்ப்பங்கள் குணத்தை மாற்றும் என்று நீ இன்னும் அறிய வில்லையா?'

'காதல் என்ற சந்தர்ப்பம் குணத்தை ஒருவிதமாக மாற்றிவிட்டால் வேறு எந்த சந்தர்ப்பமும் அங்கே தலை காட்ட முடியாது.'

'நீ நினைத்துக் கொண்டிரு! காதலால் மாறுதல் பெறுவது பெண்மை யின் ஒரு சிறிய அம்சம்தானப்பா!'

'காதல் என்றால் நீ எதைச் சொல்லுகிறாய்?'

'நீ எதைச் சொல்லுகிறாய்?'

'ஏன், ஆணும் பெண்ணும் ப்ரஸ்பரம் ஈடுபடுவதன் விளைவுதான்.'

'விளைவா, காரணமா?'

'இரண்டும்தான் என்று வைத்துக் கொள்ளேன்!'

'அதெப்படி முடியும்? காரணமாகவும், விளைவாகவும் ஒன்று இருக்கமுடியுமா?'

'அதுதான் விசேஷம் இங்கே!'

'சந்துரு, இதோ பார், அதெல்லாம் எனக்கு நம்பிக்கை கிடையாது. இயற்கையின் போக்கை தினசரி பார்க்கிறேன், அனுபவிக்கிறேன், அதை நம்புகிறேன். என்மனதைச் சொல்லட்டுமா?'

'சொல்லேன், அதைத்தானே கேட்கிறேன்.'

'காதல், கீதல் எல்லாம் எனக்குத் தெரியாது. சுலோசனா அழகாக இருக்கிறாள்; படித்திருக்கிறாள்; நன்றாகப் பாடுகிறாள். ஆகையால் அவளிடம் நான் ஸ்பரிச சுகம், பேச்சின்பம், பாட்டினிமை – மூன்றும் பெறலாம் என்று நினைக்கிறேன். ஆனால் அவள் அடையப்போகும் பணம் என் சுகங்களுக்கு இடைஞ்சலாக வரும் என்று எனக்குத் தோன்று கிறது. என்னை மதித்து அவள் என் இஷ்டப்படி இருக்க மறுக்கக்கூடும். ஆகையால்...'

'சரி, உன் ஆராய்ச்சியே சரி என்று வைத்துக்கொள்வோம். அவளிடம் மூன்று சுகங்களை எதிர்பார்ப்பதாகச் சொன்னாய். நீ...'

'எதிர்பார்ப்பது என்ற வார்த்தைகூடத் தப்பு. நான் ஒன்றுமே எதிர் பார்க்கவில்லை. நிச்சமயாகத் தெரிவது. அதைப் பெற்றால் போதும். பாங்கியில் நிச்சயமாகக் கிடைக்கும் குறித்த சதவிகித வட்டியும், டிவிடெண்டும் போதும். ஷேர் மார்க்கெட் ஸ்பெகுலேஷன் வாழ்க்கை யில் – அதுவும் ஆண் பெண் உறவில் – மிகவும் ஆபத்து – ஏமாற்றம், கோபம், துக்கம் இவைதான் ஏற்படும்.'

'ஆகையால்?'

'சுலோசனாவிடம் நான் இயற்கையைத் தவிர வேறொன்றும் எதிர் பார்க்கவில்லை. ஆகையால்தான் அவள் எனக்கு திருப்தி அளிப்பாளோ என்று பயப்படுகிறேன்!'

'ஆகையால்?'

'இன்னும் என்ன ஆகையால்? ஆகையால் அவளைக் கலியாணம் செய்து கொள்வதில்லை என்று தீர்மானித்து விட்டேன்'.

'மனத்தை – உள்ளத்தை – கொடுப்பதும், வாபஸ் பெறுவதும் உனக்கு மிகவும் சுளுவான விஷயங்கள் போலிருக்கிறதே!'

'சந்துரு, நீ கூடவா கிண்டல் செய்ய வேண்டும்? என் உள்ளத்தை சுலோசனாவிடமிருந்து வாபஸ் பெறுவது என்பது அவ்வளவு சுலப மான காரியமாக இருக்கவில்லை'.

'வாபஸ் வாங்கிவிட்டாயா?'

'வாங்கிக் கொண்டிருக்கிறேன். மிகவும் சிரமப்படுகிறது'.

'லலிதாவை யோசனை கேட்போமே! சரியானபடி சொல்லுவாள்!'

'சபாஷ் சந்துரு! எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிறாய் உன்...'

'உண்மையாக! கேலி செய்யாதே! உலக அனுபவம் எப்படியோ அவளுக்கு அசாதாரணமாக இருக்கிறது. லலிதா!'

'ஏன்?' என்று கேட்டுக்கொண்டே லலிதா இரண்டு பாத்திரங்களில் காப்பியுடன் வந்தாள்.

'சுந்தரம் சமாசாரத்துக்கு ஒரு பைசல் சொல்லேன் பார்ப்போம்!'

'சந்துரு, இதென்னடா சுத்த மோசமாக இருக்கிறாய் நீ !' என்று சுந்தரம் ஆரம்பித்தான்.

'அவர்கள் விஷயத்தில் பைசல் செய்வதற்கு என்ன இருக்கிறது?

'சுலோசனாவைக் கலியாணம் செய்துகொள்ள இவனுக்கு இஷ்டந் தானாம்...'

'எல்லாம் எனக்குத் தெரியும். சுலோசனா சிற்றப்பாவின் பணத்தை வேண்டாமென்று சொல்லிவிடுவதாகத் தீர்மானித்து விட்டாள்!' என்று வெகு சாவதானமாகச் சொல்லிவிட்டு லலிதா சமையல் அறையைப் பார்த்து, 'அப்படித்தானே சுலோச்? நான் சொன்னது சரிதானே?' என்றாள் சிரித்துக்கொண்டே.

சந்துருவும் சுந்தரமும் திகைத்துப் போனார்கள்.

'சுலோசனா எப்பொழுது வந்தாள்?'

'மிஸ்டர் சுந்தரம் வருவதற்கு ஒருமணி நேரத்திற்குமுன். ரகசியமாக வந்தாள். ரகசியமாக உள்ளேயே இருந்தாள். ரகசியமாக விஷயத்தைச் சொன்னாள்!'

சந்துரு உரக்க 'சுலோசனா, இங்கே வாம்மா!' என்று கத்தினான்.

லலிதா சிரித்துக்கொண்டே 'ஏது ரொம்ப சுவாதீனமாகக் கூப்பிடுகிறீர் களே!' என்றாள்.

'சுவாதீனமில்லாமல் பின் என்ன? வருகிறாயா அல்லது சுந்தரத்தை வரச்சொல்லட்டுமா?' என்று சந்துரு மறுபடி கத்தினான்.

சுலோசனா சிவந்த முகமும், சிறு முறுவலுமாக மெள்ள நடந்து

வந்தாள்.

'கொடுத்துவைத்த பயலடா நீ!' என்றான் சந்துரு.

'நீ?' என்று சுந்தரம் திருப்பிக் கேட்டான்.

★★★

இரவு எட்டு மணிக்கே இருவரும் சாப்பிட்டுவிட்டார்கள். சந்திரசேகரன் லாரன்ஸ் நாவல் ஒன்றை எடுத்து வைத்துக் கொண்டு படிக்க உட்கார்ந்தான். சிறிது படித்தான். ஓடவில்லை.

'லலிதா, இன்னும் என்ன காரியம் செய்கிறாய்? வா, எல்லாம் காலையில் செய்து கொள்ளலாம்!' என்று லலிதாவைக் கூப்பிட்டான்.

'இதோ ஆயிற்று, வருகிறேன்!' என்று லலிதா பால் கூஜாவை எடுத்துக்கொண்டு வந்தாள்.

சந்திரசேகரன் படக்கென்று புத்தகத்தை மூடினான்.

'ஏன், வாசிக்கவில்லையா?'

'புத்தகத்தில் வாசிப்பதைக் காட்டிலும் உன் முகத்தில் அதிக ஸ்வாரஸ்யம் இருக்கிறது. நல்ல நிலாவாக இருக்கிறதே, மாடிக்குப் போவோம் வா!' என்று சந்திரசேகரன் எழுந்தான்.

'வாசியுங்களேன், கேட்டுக் கொண்டிருக்கிறேன்!'

'இப்பொழுது ஓடவில்லை, வா!' என்று அவன் அவள் கையைப் பிடித்து மாடிக்கு இழுத்துக்கொண்டு போனான்.

இருவரும் வெட்டவெளியில் கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்தார்கள்.

'லலிதா, லாரன்ஸ் வெகு நுட்பமாக எழுதுகிறான்'.

'எதைப்பற்றி!'

'பெண் உள்ளத்தைப் பற்றியும், காதலையும் பற்றித்தான்!'

'நுட்பம் என்றால்?'

'உண்மையை அப்படியே வெளியிடுகிறான்'.

'உண்மையென்று நீங்கள் எப்படித் தீர்மானிக்கிறீர்கள்?'

'மனோபாவத்தில் எது அழகென்று படுகிறதோ அது தான் உண்மை என்று கீட்ஸ் சொல்லிவிட்டானே!'

'அப்படி என்ன சொல்லுகிறான்?'

'பெண் உள்ளத்தின் ஆழம் அகாதமானது. அதன்...'

'ஐயையோ, வெறும் பொய்! அபாண்டமான வார்த்தை!'

'பொய்யே அல்ல-அபாண்டமே அல்ல-நானே பார்க்கிறேனே!'

'என்ன பார்க்கிறீர்கள்?' என்று லலிதா சிரித்துக் கொண்டு கேட்டாள்.

'இவ்வளவு நாட்களாக நாம் சேர்ந்து வாழ்கிறோம். இன்னும் நீ உன் மனதில் இருப்பதை முற்றிலும்...'

'என் மனதில் என்ன இருக்கிறது?'

'நிறைய இருக்கிறது. ஒன்று சொன்னால்கூட நான் மெய் மறப்பேன்

– சொல்லமாட்டேன் என்கிறாயே!' என்று சந்திரசேகரன் இளகினவனாய் சொன்னான்.

'என்ன சொல்லவில்லை?' என்று சொல்லி, சற்று நிறுத்தி பிறகு 'சொன்னால் தானா?' என்றாள் லலிதா.

'லலிதா, இனிமேல் என்னால் சொல்லாமல் இருக்க முடியாது. எவ்வளவு நாள்தான் நீ இப்படி என்னை தூரத்தில் நிறுத்தி, உன் உள்ளக் கிளர்ச்சியை அறியாதபடி தவிக்கவிட்டு வேடிக்கை பார்க்கப் போகிறாய்? உன் ஹிருதயத்தை அண்டவிட மாட்டேன் என்கிறாயே!'

லலிதா அவன் பேசுவதைக் கேட்டு கொஞ்சம் கலவரமடைந்தாள். அவள் உள்ளமும் விம்ம ஆரம்பித்தது. சற்று நிதானித்துக்கொண்டு சிரிப்பை வரவழைத்துக் கொண்டு 'லாரன்ஸ் வாசித்ததன் பலனா இது? அவன் என்ன எழுதித் தொலைத்திருக்கிறான்?' என்றான்.

'அவன் ஒன்றும் எழுதவில்லை. ஒரே வீட்டில் தனியாக இருந்து கொண்டு நீ யாரோ நான் யாரோ என்பது போல எவ்வளவு நாள் இருக்கிறது? இந்தக் கொடுமை அடுக்குமா உனக்கு?'

அவ்வளவு நாட்களாக இல்லாமல் அன்று ஏனோ அவனை மிருக இச்சை வாட்டத் தொடங்கிவிட்டது என்று லலிதா கண்டாள். அவன் பார்வைகளும், சேஷ்டைகளும் குரலிலிருந்த வேகமும் சேர்ந்து அவளைக் கூட சிறிது பதில் சொல்லும் தருவாய்க்கு கொண்டு வந்து விட்டது. தன்னை அடக்கிக் கொண்டாள். அவனை அவ்வளவு சுலபமாக அடக்க முடியாது என்று உணர்ந்து லலிதா தன் முழுசக்தியையும் உபயோகித்து அவனைச் சாந்தப்படுத்த ஆரம்பித்தாள்.

'இடுப்பு வலிக்கும். இப்படி மடியில் தலைவைத்துக் கொண்டு படுத்துக் கொள்ளுங்கள்' என்று ஆதரவுடன் அவனை இழுத்து படுக்க வைத்துக்கொண்டு அவன் முகத்தைத் தடவிக்கொண்டே 'நிலவு எவ்வளவு நன்றாக இருக்கிறது! இப்படியே நாமிருவரும் இருந்தால் போதுமே!' என்றாள்.

அந்த ஸ்பரிசத்தினால் ஏற்பட்ட இன்பம் அவனுடைய சரீர தாகத்தை அதிகப்படுத்துமோ என்றுகூட அஞ்சினாள் லலிதா. ஆனால் அதைக்கூட அந்த சமயம் அவனுக்கு அளிக்காவிட்டால் அவன் உள்ளம் உடைந்து போகும் என்று பீதியடைந்து, லலீதா குனிந்து 'ஏன் பதில் இல்லை, கோபமா?' என்று இளக்கும் குரலில் கொஞ்சினாள்.

'லலிது!' என்று சந்திரசேகரன் தன் தலையை மடியிலிருந்து எடுத்து விலக்கிக் கொண்டு அவளைத் தன்பக்கத்தில் சாய்த்து இழுத்தான்.

லலிதா தன்னையும் மறந்தாள். இளமையை எவ்வளவு தான் தலையிலடித்து உட்கார வைக்க முடியும்?

'என்ன?' என்று முணுமுணுத்த வண்ணம் அவன் வெறிபிடித்த அணைப்பிற்கு இணங்கினாள்.

அப்பொழுது வாசலில் வண்டி வந்து நிற்கும் சத்தம் கேட்டது.

'சின்ன அய்யா இங்கேதானே இருக்காரு?' என்று சாமித்துரை, தெருவில் யாரையோ விசாரிப்பதும் கேட்டது.

சந்திரசேகரன் குரலைஅறிந்ததும் குதித்து எழுந்தான். வாசலோரமாக ஓடி 'சாமித்துரை!' என்று கத்தினான்.

'சந்துரு!' என்று பதில் வந்தது.

இருவரும் கீழே போய்க் கதவைத் திறந்தார்கள்.

'எட்டு மணி வண்டிக்கா வந்தே, சாமித்துரை?'

'ஆமாம் குழந்தை! திடீர்னு புறப்பட்டேன், கடதாசி எளுதக்கூட முடியல்லே! ஐயோ சாமி! உன்னெக்கண்டு பிடிப்பமான்னு ஆயுடுச்சு. டேஷன்லே...'

'சரி, உள்ளே வா சாமித்துரை! அப்புறம் சாவகாசமாகப் பேசிக்கலாம். முதல்லே சாப்பிடு வா!' என்று லலிதா முன்வந்து சொன்னாள்.

சாமித்துரை சற்றுநேரம் அப்படியே நின்று போனான். பிரமை பிடித்தவன் போல லலிதாவைப் பார்த்தான். பிறகு வாயை மூடிக் கொண்டு உள்ளே நுழைந்தான். பேசவே இல்லை – சங்கோஜமோ, திகைப்போ, வெறுப்போ?

லலிதா இலைபோட்டுச் சாதம் வைத்து மீதமிருந்த குழம்பை ஊற்றினாள். இயந்திரம்போல் பிசைந்து சாப்பிட்டான். பிறகு மோர் விட்டாள். சாப்பிட்டான்.

'சாமித்துரை! சங்கோஜப்படாதே! என்னவேணும், கேள்!' என்று லலிதா புன்னகையுடன் கேட்டாள்.

'வயறு நிறைஞ்சுட்டது குழந்தை!' என்றான்.

'ஊரில் என்ன விசேஷம்?' என்று சந்திரசேகரன் கேட்டான்.

'அல்லாருமே சௌக்கியந்தான்-அம்மாதானா...?'

'ஆமாம்!' என்றான் சந்திரசேகரன் சிரித்துக்கொண்டே.

'மகாலட்சுமி மாதிரி இருக்கே! முவத்தெப் பாத்தாலே பண்ண பாவம் போயிடுமே!' என்றான் சாமித்துரை.

சந்திரசேகரன் லலிதா இருந்த பக்கம் திரும்பினான்.

பேச வாயெடுத்தான்.

லலிதா ஜாடை காட்டித் தடுத்தாள்.

'கிளவிக்கு சவாபு சொல்லிப்பிடுவேன்! அப்புறமேலே எந்தப் பய கூடாதுங்கறான், பாத்துப்புடரேன்!' என்று உரக்கச் சொல்லிக் கொண்டான் சாமித்துரை.

'என்ன சொல்லுகிறாய் சாமித்துரை?' என்று சந்திரசேகரன் தூண்டினான்.

'பெரியய்யா கூட ஏதோ ஓம்பேச்சைக் கேட்டுக்கிட்டு வந்திட்டாருன்னு நான் வந்தேன். இங்கே வந்து பாத்தா – குளந்தே நம்ம ஊட்லே

அழ ஆரம்பித்து விட்டான்.

சந்திரசேகரன் பதறிப்போய் 'என்ன சாமித்துரை?' என்று கேட்டான்.

'கிளங்க நாங்க பண்ண புண்ணியம். சாமி புண்ணியத்துலே கண்ணாலமாகி நீங்க கொளுந்தெ குட்டியுமா நல்லா இருக்கணும். கணேசன் தான்...'

லலிதாவும் சந்திரசேகரனும் அந்தக் கிழக்குடியானவன் கண்ணீரைக் கண்டு தெய்வ சன்னிதியில் நிற்பதுபோல் நின்றார்கள்.

'கிளவி பாத்தா...'

'கூட்டிக்கொண்டு வருகிறதுதானே சாமித்துரை?'

'எங்கே சந்துரு, நானே...' என்று கிழவன் நிதானமடைந்து பேச ஆரம்பித்தான்.

'ரொம்ப கஷ்டப்பட்டு விட்டாயோ வரத்துக்கு?'

'அதேங்கேக்கிறே போ சந்துரு!' என்று கதை சொல்ல ஆரம்பித்து விட்டான்.

'அதிருக்கட்டும், அது என்ன மூட்டையில்?' என்று சந்துரு அதை எடுத்து அவிழ்த்தான்.

சாமித்துரை, சிறுபிள்ளை வெட்கம் மூண்டவனாய் 'ஒண்ணுமில்லே, கிளவி என்னமோ கட்டிக் கொடுத்திருக்கா!' என்றான்.

மேலே ஒரு சிறு துணி மூட்டை இருந்தது. பச்சை வேர்க்கடலை. கீழே அலுமினியம் சொம்பு ஒன்றில் நிறைய வெண்ணெய்.

'இதென்ன சாமித்துரை?'

'உனக்கு வெண்ணெய் பிடிக்குமேண்ணு நல்ல வெண்ணெயா போட்டுவச்சா!'

சந்திரசேகரன் ஒரு கை நிறைய எடுத்து 'லலிதா, இந்தா, பிரசாதம் சாப்பிடு!'என்றான்.

உள்ளம் கனிந்துபோய் உட்கார்ந்திருந்த லலிதா அதை அன்புடன் வாங்கிக் கொண்டாள். அவனும் கொஞ்சம் எடுத்துத் தின்றான்.

சாமித்துரை வீட்டை மேலும் கீழுமாகப் பார்த்து 'இங்கேயும் எலக்ட்ரி இருக்குதா?' என்றான்.

'இங்கே வந்த பிறகு தான் அங்கெல்லாம் வந்தது சாமித்துரை!'

'இங்கிருந்தா வருது?' என்று அவன் கேட்ட கேள்விக்கு சுருக்கமாக சந்திரசேகரன் 'ஆமாம்!' என்று பதில் சொல்லிவிட்டான்.

'டேஷன்லேருந்து இங்கே வாரத்துக்கு வாடவெ ஒத்தெ ரூபா வாங்கிப்பிட்டானே? பவல் நேரமானா நடந்தே வந்துடுவேன்...'

'இங்கே புது ஆள் நடந்து வருவது கஷ்டம்'.

'பெரியய்யா வண்டி வச்சுக்கிட்டா வந்தாரு?'

'ஆமாம், பெரியம்மா என்ன சொல்லீச்சு?'

'அதெல்லாம் எதுக்கு?... சரி, சந்துரு, கண்ணாலம் ஆகாமெ இப்படி

தனியா ஒரு ஊட்லே இருக்கலாமா?' என்று சாமித்துரை சட்டென்று பட்டவர்த்தனமாக ஒரு கேள்வி கேட்டுவிட்டான்.

அதற்குப் பதில் சொல்ல முடியாமல் இருவரும் தலை குனிந்து கொண்டார்கள்.

அவன் சொன்னதில் பிசகில்லை. அவன் வந்து கலைத்திருக்கா விட்டால் சற்று முன்பு அவர்கள் உணர்ச்சி அவர்களை எவ்வளவு தூரம் கொண்டு போயிருக்கும் என்பதை இருவரும் ஒரே சமயத்தில் உணர்ந்து வெட்கிக் குன்றிப் போனார்கள்.

'கோவிச்சுக்காதே. சொன்னேன். வளக்கத்துக்கு -ஆனா குளந்தெ இருக்கிற எடத்துலே தப்பு நடக்காது!' என்றான் சாமித்துரை.

'அதற்குள் குழந்தையை அவ்வளவு நன்றாக அறிந்து கொண்டு விட்டாயா?' என்று சந்திரசேகரன் நிதானித்துக் கொண்டு கேட்டான்.

'ஒரு பார்வை பார்த்தா போதாதா? நான் என்னமோ எப்படி யோன்னுல்ல வயத்துலே நெருப்பைக் கட்டிக்கிட்டு வந்தேன்.. தாயே! நீ கொளந்தே குட்டிகளைப் பெத்துக்கிட்டு ஆயிரம்காலம் ஆயுசோடே இருக்கணும்!'

லலிதாவின் கண்கள் கலங்கிவிட்டன. அவளால் பேச முடியவில்லை.

'லலிதா, சாமித்துரை சம்மதிச்சா அப்புறம் ஒண்ணும் பிரமாதமில்லே! சாமித்துரை, பொண்ணு உனக்கு புடிச்சிருக்கு. அப்படியானால்?' ... என்று சிரித்துக்கொண்டே கேட்டான்.

'கிடைக்கமாட்டாத பொண்ணு. பெரியய்யா கொணத்துக்கு ஒண்ணும் குறைவா நடக்காது. பெரியய்யா எப்பப் பார்த்தாலும் கொளந்தெயெ பத்தித்தான் பேசிக்கிட்டு இருக்காரு. அம்மாதான் ஒரு மாதிரியா இருக்கு. எல்லாம் சரியாப் போவும்!' என்று எண்ணங்கள் மேலே ஓடினவனாய்'பட்டண பிரவேசத்துலே ரெண்டு பேரையும் பாத்தா ராசா இராணி மாதிரி இருக்கும். அப்பாலே திருட்டி களிக்கணும்'என்று திட்டம் போட்டான்.

'லலிதா, இந்த நவநாகரிக சமூகத்தில் தேடித் தேடிப் பார், இந்த மாதிரி ஒரு மனுஷ்யன் கிடைப்பானா?'

லலிதாவுக்குப் பேச்சே வரவில்லை. மாமனாராக வரப்போகிறவரிடம் கூட தாராளமாகப் பழக அவளுக்கு சிரமமாக இருக்கவில்லை. இந்தக் கிழவன் முன்னால் அவள் வாய் திறக்கப் பயப்பட்டாள். என்ன சொன்னாலும் அவனுக்கு என்ன வெறுப்பு ஏற்பட்டுவிடுமோ என்று திகில் பட்டாள்.

'கொளந்தெ பேசமாட்டேங்குதே!'

'வெட்கப்படுகிறாள்!' என்றான் சந்திரசேகரன்.

அந்தக் கிராமாந்திரக் கிழவன் முன்பு அவள் வெட்கம் தான் கொண்டாள்.

# 5

திருவெழுந்தூர் மாயவரத்திற்கு மூன்று மைல் தூரத்திலுள்ள கிராமம். ஒரு காலத்தில் கொழுத்த அக்கிரகாரமும் குடியானத் தெருக்களும் இருந்தன. என்ன காரணத்தாலோ தற்சமயம் ஊர் க்ஷீணித்துப் போய் விட்டது. அக்கிரகாரம் மிகவும் மோசம். இரண்டு சிறகுகளிலும் பத்துப் பதினைந்து வீடுகளில் தான் குடியிருப்பு; மற்ற வீடுகள் எல்லாம் நடுநடுவே பாழ்களாகவும், இடிந்த மனைகளாகவும் இருக்கின்றன.

அக்கிரகாரத்தில் இருப்பவர்களில் பலர் பரம ஏழைகள், ராமஸ்வாமி சாஸ்திரிகளும், ராஜா கனபாடிகளும்தான் சொத்து சுதந்திரம் உடைய வர்கள். அடுத்தபடியாகக் கோடிவீட்டு சாமா, மிராசுதார்; கொஞ்சம் ஆங்கிலம் படித்தவர். அவர் வீட்டு வாசலில் சதா சீட்டுக் கச்சேரிதான். கோவில் குருக்கள், தெய்வசிகாமணிக் குருக்கள் உல்லாஸப்பேர்வழி. மற்றபடி அப்பு என்ற பிரம்மசாரி. ஊர் முழுவதும் நல்லதோ, கெட்டதோ நேர்ந்தால் பிரசன்னமாயிருந்து தலைமை வகிப்பவன்.

குடியானத் தெருவில் கணபதியா பிள்ளைதான் நல்ல பணக்காரர். திண்ணையில் சாய்ந்து கொண்டு தெருவில் கைகட்டி நிற்கும் குடியான வர்களை வாய்க்கு வந்தபடி திட்டிக்கொண்டே இருப்பார். குடியானத் தெரு வேலு ஒரு பிரசித்திபெற்ற பேர்வழி. கைகூடாது என்கிற காரிய மெல்லாம் அவன் மூலம் கைகூடும். சாமித்துரையும், சுப்ரமணிய படையாச்சியும் வயதான பிரமுகர்கள். வயதானவர்கள் என்பதற்காக ஊரில் அவர்களுக்கு மதிப்பு உண்டு. சாமித்துரை ராமஸ்வாமி சாஸ்திரி களின் பண்ணையை நிர்வாகம் செய்து வந்தான்.

அக்கிரகாரத்திற்கு அருகில் காவேரி. அதற்குப் போகும் பாதை ரிஷி ஆசிரமம்போல மனோகரமாக இருக்கும். காவேரிக் கரையில் சிறு பிள்ளையார் கோவிலும், அழகிய நந்தவனமும் இருந்தன. அவற்றில் தான் அக்கிரகாரத்து விவகாரங்கள் எல்லாம் 'அத்துப்படி' ஆகும். தற்சமயம் ஆற்றில் ஜலம் இல்லை, குளிக்கவும், குடிதண்ணிர் எடுக்கவும் ஊற்றுகள் போடப்பட்டிருந்தன.

ராமஸ்வாமி சாஸ்திரிகள் பட்டணத்திலிருந்து திரும்பி வந்த அன்று காலை. காவேரிப் படித்துறையில் வெங்கடசுப்பா சாஸ்திரியும், குப்பு வாத்தியாரும் ஆளோடியில் உட்கார்ந்து செம்பு தேய்த்துக் கொண்டிருந் தார்கள். ராஜா கனபாடிகள் வந்தார் குடலையும் கையுமாக. ராமண்ணா ஜோஸ்யர் பல்துலக்க பழுத்த மாவிலை ஒன்றை பொறுக்கி எடுத்துக் கொண்டு வந்தார்.

'சாஸ்திரிகள் பட்டணத்துலேருந்து வந்தூட்டாப்லே இருக்கே!'

என்று ராஜா கனபாடிகள் ஆரம்பித்தார்.

'எப்பங்காணும்?' என்று வெங்கடசுப்பா சாஸ்திரி செம்பு தேய்ப்பதை நிறுத்திவிட்டுக் கேட்டார்.

'இப்பத்தான் மெயில்லே வந்தாராம்! அப்பு பாத்தானாம். முகத்துலே ஈயாடல்லியாமே பிராமணனுக்கு!'

'என்னமாங்காணும் ஆடும்? இவரெ லட்சியம் பண்றவனாயிருந்தா அவன் அவளெக் கலியாணம் பண்ணிக்கிவனோ? போய்ப் பார்த்திருக்கார்; விஷயம் மிஞ்சிப் போயிருந்திருக்கும். பேசாமெ திரும்பீட்டார்!'

'போய் ஒரு வாரமாச்சேங்காணும். நீர் சொல்றபடி இருந்தா இவ்வளவு நாள் அங்கே என்ன ஜோலி?'

ராமண்ணா ஜோஸ்யர் முழுச் செவிடு. ஆனால் வம்பு பேச வேண்டுமென்ற ஆவல் மட்டும் அசாத்தியம். தொண்டையைக் கிழித்துக் கொண்டு ஒன்றைச் சொன்னால் ஏதாவது ஒரு தினுசாக அதை அர்த்தம் செய்துகொண்டு அசட்டுச் சிரிப்புச் சிரித்துத் தலையை ஆட்டுவார். அங்கிருந்தவர்கள் ஏதோ பேசுகிறார்கள் என்று கண்டதும், செம்பைத் தேய்த்துக்கொண்டே குப்பு வாத்தியாரிடம் வந்து மெதுவான குரலில் 'என்ன விசேஷம்?' என்று கேட்டார்.

'பட்டணத்துலேருந்து...!' என்று வாத்தியார் கத்தினார்.

'ஆமாம்!' என்று ராமண்ணா மெள்ள பதில் சொன்னார்.

'சாஸ்திரிகள் வந்துட்டார்!' என்று வெங்கடசுப்பா சாஸ்திரி அலறினார்.

'கடுதாசி வந்திருக்கா?'

'நாசமாய்ப் போச்சு! உமக்குத்தான் காதுகேக்கலியே! இதுக்கெல்லாம் ஏதுக்கு வரீர்?'

'கீழே எழுதிக் காட்டும்!' என்றார் ஜோஸ்யர்.

குப்பு வாத்தியார் எழுதிக் காட்டினார்.

'ஆஹா! கலியாணம் ஆயிட்டுதா!?'

தெரியவில்லை என்று வாத்தியார் கையைத் திருப்பிக் காட்டினார்.

அப்பொழுது ராமஸ்வாமி சாஸ்திரிகள் மடிஸஞ்சியுடனும், செம்புடனும் வந்தார்.

'வாங்கோ, எப்ப வந்தாப்பலே?' என்று ராஜா கனபாடிகள் வரவேற்றார்.

'இப்பத்தான்!' என்று சாஸ்திரிகள் சந்தோஷமாகவே பதில் சொன்னார்.

அங்கே இருந்தவர்கள் சந்தேகத்துடன் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

குப்பு வாத்தியாருக்குத் துணிச்சலும், வாயும் அதிகம்.

'என்ன ஆச்சு? விஷயம் எந்த மட்டிலே...' என்று ஆரம்பித்தார்.

'இதோ பார் குப்பு! வந்ததும் வராததுமா இதென்ன விசாரணை? கிராமத்திலே இப்படித்தான். பட்டணத்திலே இருந்தேன்-நான்கு

நாட்கள் நிம்மதியாக!'

'பெரியவாள் கோவிச்சுக்கப்படாது. நான் ஏதோ உங்கள் குடும்பத் துலே...'

'சரி தாங்காணும். வம்பளப்பதே தொழிலாப் போச்சு'.

'ஓய், ஏங்காணும் நீர் வாயைக் கொடுத்து அனாவசியமாக...' என்று ராஜா கனபாடிகள் ஆரம்பித்ததுமே. சாஸ்திரிகள் அவர் மேல் பாயந்தார்.

'கனபாடிகளே, உங்கள் யோக்யதை என்ன, நீங்கள் என்ன, எதுக்கு இந்த மாதிரி பொழுது போகாத வம்பில் வந்து தலையிடுகிறீர்கள்?'

கனபாடிகளுக்குக் கோபம் வந்துவிட்டது.

'நான் என்ன தலையிட்டுவிட்டேன், நீங்கள் பார்த்து விட்டீர்கள்? குப்பு ஏதோ அனாவசியமாக உங்களை வாயைக் கிண்டினான், ஏதுக்கு வம்புன்னேன்!'

'வாயைக் கிண்டறதென்ன, வயிற்றைக் கிண்டறதென்ன? பட்டணம் போனேன், பையனைப் பாத்தேன். நல்ல பொண்ணு. வருகிற மாதம் இங்கே கலியாணம் – இவ்வளவுதான் விஷயம் – சரிதானா?' என்று சொல்லிவிட்டு ராமஸ்வாமி சாஸ்திரிகள் ஸ்னானம் செய்ய ஆரம்பித்தார். மேலே ஒருவரும் ஒன்றுமே பேசவில்லை.

★★★

சாஸ்திரிகள் தலைமறைந்ததும் ஆற்றங்கரையில் மறுபடியும் வம்பு தலையெடுக்க ஆரம்பித்தது.

'கிழவருக்கு என்ன கோபம் இப்படிப் பொத்துக் கொண்டு வருகிறது?' என்றார் குப்பு வாத்தியார்.

'வந்ததும் வராததுமாய்...'

'இல்லைகாணும். ஏதோ விஷயமிருக்கிறது. இல்லாட்டா...'

'விஷயமென்ன? இருக்கிற நிலைமையில் கலியாணம் செய்யாமல் வேறு வழியில்லாமல் இருக்கும். தீராது என்று ஒப்புக்கொண்டு வந்திருக்கிறார் பிராமணன். நம்மிடத்தில் பொண் பிடிச்சுருக்கு என்று சொல்லிக் கொள்ளுகிறார்!' என்று கனபாடிகள் முடிவு கட்டினார்.

'இங்கே கலியாணமாமே, நன்னாருக்கோன்னா? இதுவரையிலும் இந்த மாதிரி...'

'இங்கே கலியாணம் நடந்துவிடுமோ, எங்கே பார்த்து விடுகிறேன்!' என்று கனபாடிகள் கர்ஜித்தார்.

'என்ன பண்ணிப்பிடுவீர்கள்?'

'என்ன பண்ணுவேனா! பார்த்துக்கொண்டே இரும்!'

அப்பொழுது கணபதியா பிள்ளை பல்குச்சுயைக் கடித்துக்கொண்டே, மரப்பாலத்தின் மேல் வந்து கொண்டிருந்தார்.

'பிள்ளைவாளுக்கன்னா!' என்று கனபாடிகள் அவரைக் கூப்பிட்டார்.

பிள்ளை பல்குச்சியை எறிந்துவிட்டு வந்தார்.

'விஷயம் கேள்விப்பட்டேளோ? நம்மூர்லே இந்த மாதிரி...'

'என்ன விஷயம்?'

'சாஸ்திரிகள் இங்கே கலியாணம் நடத்தப்போறாராம்! உங்களுக்குத் தெரியாதா?'

'தெரியாதே!'

'என்ன தைரியம் பாருங்கோ! இதுவரையிலும் இந்த ஊர் அக்கிர காரத்தில் நடைபெறாத மாதிரி கலியாணம். உங்களுக்குத் தகவல் தெரியாமல் நடக்கப்போகிறது!'

'ஆமா, ஏதோ படிச்ச பொண்ணைக் கட்டப்போறாங்கன்னு நம்ம குளந்தெ சௌந்தரம் சொன்னா! நிசந்தானா அது?'

'உங்க காலத்துலே அக்கிரகாரம் இப்படிக் குலைந்துபோகவிடக் கூடாது நீங்கள்! ஒரு கட்டுப்பாடு, கெடி வேண்டாமா? உங்கள் பெரியவா காலத்துலே அக்கிரகாரத்துலே எது நடந்தாலும் பிள்ளை வீட்டு சம்மதம் இல்லாமல் நடக்காது...' என்று கனபாடிகள் தந்திரமாக முறுக்கேற்றினார்.

'இப்பத்தான் என்ன? நம்ம சம்மதம் இல்லாமெ...'

'இந்தக்கே கலியாணம்...'

'நடந்திருமா? பாப்பமே அத்தையும்தான்!'

'அவ்வளவுதான் வேண்டியது. உங்க காலத்துலே கெட்டபெயர்...'

'சாஸ்திரியாரு நம்மெக் கேக்காமெ, கொள்ளாமெ செஞ்சுருவாரா?'

'செஞ்சா நாமென்ன செய்யமுடியும்?' என்று குப்பு கிண்டினார்.

'அப்பு!றம் ஊரென்ன, கட்டுப்பாடென்ன, நான் இங்கே இருக்கிறது எதுக்காக?' என்றார் பிள்ளை.

'நீங்க அவ்வளவு கவனித்துக் கொண்டால் போதுமே!'

'சமயத்துலே சொல்லுங்க! கலியாணம் எங்கேவாணாலும் நடக் கட்டும் – இந்த ஊர்லே நடக்கப்படாது! ஓகோ, குட்டி சௌந்தரம் சொன்னா, முகூர்த்தம் வச்சாச்சா?'

'தெரியவில்லை. விசாரித்து...'

'சௌந்தரத்துக் கிட்டே சாஸ்திரியாரு மக, எல்லாம் சொல்லிக்கிட்டு இருந்துதாம். பொண் தங்கமான பொண்ணாம். படிச்சுதுன்னு அப்படி ஒன்றும் விபரீதமாக இல்லையாம்...'

'இருந்தாலும் பெரிய மனுஷியான பொண்!'

'அது சரித்தானுங்க. இந்தக் காலத்துலே அல்லாம் பெரிய மனுஷி ஆன பொறகுதான் கண்ணாலம் பண்றாங்க...'

கனபாடிகளுக்கு தாது விழுந்துவிட்டது.

'நம்ம ஊர்லே அந்த அனாசாரத்துக்கு நீங்க இடம் கொடுத்து விட்டா...'

'அது சரிங்க!' என்று யோசித்துக் கொண்டே பிள்ளை, வீட்டுப் பக்கம் போனார்.

'பிள்ளை நிமிர்ந்துவிட்டால் காரியம் நடக்காது குப்பு!'

'சாஸ்திரிகள் இவ்வளவு தூரம்போன பிறகு யாரையும் லக்ஷியம் செய்யமாட்டார்!'

'பார்க்கிறேனே!' என்று கனபாடிகள் உறுமினார்.

'அனாவசியமாக ஊரில் பெரிய மனுஷரை விரோதிச்சுக்கறதுதான் மிச்சமாகும். என்ன ஆனாலும், சாஸ்திரிகள் தலைக்கட்டுள்ள பேர்வழி. சாமித்துரைக்கு செல்வாக்கு ஜாஸ்தி. அவர் கை ஓங்கிவிடும். கடைசி யில் பிள்ளையும் ஒதுங்கிவிட்டால் நம்பாடு திண்டாட்டம்தான்...'

'பிள்ளை விடமாட்டார்!'

'யார் கண்டார்கள்! இப்பவே சாஸ்திரிகள் பொண். அவர் பொண்ணிடம் ஏதோ ஓதி இருக்கிறாள். சௌந்தரம், சௌந்தரம் என்ற பெண் ஓங்கிச் சொன்னால் பிள்ளை சும்மா இருந்துவிடுவார்!'

'அவர் சுபாவம் தெரியாமல் உளராதேயும்! அவர் பிடிவாதம்...'

'என்னமோ, இந்த சங்கடம் நமக்கு வேண்டாமென்று தோணு கிறது!' என்று குப்பு வாத்தியார் இறங்கி வந்து விட்டார். அதனாலேயே கனபாடிகள் வேகம் அதிகமாயிற்று.

'உம்மைத் தெரியாதா எனக்கு? சாஸ்திரிகள் வீட்டு தக்ஷிணை போய் விடுமே என்று பார்க்கிறீர்!' என்றார்.

'நீர் வராமல் இருக்கிறீரா பார்க்கிறேன்!'

அப்பொழுது ஜோஸ்யர் வந்து 'என்ன?' என்று கையை ஆட்டிக் கேட்டார்.

'உம்ம தலை! போங்காணும்!' என்று எரிந்துவிழுந்தார் குப்பு வாத்தியார்.

அப்பொழுது அப்பு அங்கே வந்து சேர்ந்தான்.

'வாடா, அப்பு, சமாசாரம் தெரியுமா?' என்று குப்பு வாத்தியார் ஆரம்பித்தார்.

'என்ன புது சமாசாரம்? சந்துரு கலியாணம் தானே? இங்கேதான் தடபுடலாக நடக்கப் போகிறது'.

'இங்கே நடக்கப்படாதுன்னு கனபாடிகள் கட்சி கட்டறார்'.

'கனபாடிகள் ஊரா இது?' என்று அப்பு சுருக்கமாகக் கேட்டான்.

'என்னடா சொல்றே? இந்த ஊர்லே அந்த கலியாணம் நடந்துடுமோ?'

'நடக்காமெ என்ன பண்ணும்?' என்று அப்பு சிரித்துக்கொண்டே கேட்டான்.

'நிறுத்திப்பிடரேன் பாரு!'

'எப்படின்னேன்-சித்தெ சொல்லுங்களேன்?'

'பிள்ளைவாளிடம் சொல்லியிருக்கிறேன். அவரும்...'

'பிள்ளைவாள் பொண் இதற்கு ஆதரவு - பிள்ளை அண்ணாமலை யுனிவர்ஸிட்டியில் படிக்கிறானே, சிதம்பரம் - அவன் ஆதரவு - பிள்ளை என்ன செய்யப் போறார்?'

'பாக்கறேனே!'

'பாருங்கோ, பாருங்கோ! கலியாண ஏற்பாடெல்லாம் - யார் தெரியு மோல்லியோ? நான் தான்! ஏதாவது கலாட்டா பண்ணேள் - அப்புறம் - தெரியுமா சேதி!'

'என்னடா பண்ணிப்பிடுவே?'

'உங்க காதுலே தொங்கறதே குண்டலம்-அதெப் பிடிச்சு உங்காத்து உத்தரத்துலே கட்டிப்பிடுவேன். தெரியுமா? உங்க காலமெல்லாம் மலையேறிப் போச்சு. வாலை ஆட்டினா ஒட்ட அறுத்துப் பிடுவேன்!'

'மட்டு மரியாதை இல்லே! அயோக்கியப் பயலே! நேத்திக்கு பொறந்த பய... உங்கப்பன்...'

'சரிதான் ஓய்-மரியாதையாயப் பேசினா கேக்கமாட்டீர். உம்ம கிராம அட்டகாசங்கள் எல்லாம் இனிமே நடக்காது, தெரியுமா? யுகம் புரண்டு போச்சு ஸ்வாமி!'

'அட போக்கிரி...'

'அதானே வேண்டாங்கறேன். யாரையா போக்கிரி?'

'கனபாடிகளே, வாயை மூடிண்டு இருமே, காலம் கெட்டுப் போச்சு, பெரியவா எங்கிறதே போச்சு...' என்று குப்பு வாத்தியார் முடிப் பதற்குள், அப்பு அவர் பக்கம் திரும்பி 'அடேடே, வாங்கோ வாத்தி யாரே, ஏது தக்ஷிணை எங்கேயாவது வலுவோ?' என்றான்.

ஆற்றங்கரை ஓசை அடங்கிப் போய்விட்டது. எல்லோரும் மௌன மாக ஜபம் நடத்தினார்கள். மரங்கொத்தியோ, செம்போத்தோ 'கொக், கொக்!' என்று ஒரே மாதிரி சத்தம் செய்து கொண்டிருந்தது.

★★★

'இன்று மத்தியானம் பிரின்ஸிபால் உங்களை எதற்கோ கூப்பிட்டு விட்டார் போலிருக்கிறதே, எதற்கு?' என்று கேட்டுக்கொண்டே லலிதா டீ கொண்டு வந்தாள்.

'நேர்மைக்கு எங்கும் ஏற்படும் எதிர்ப்புதான். நாம் இருவரும் தனியாக இருப்பதைப் பற்றி ஏகப்பட்ட அமர்க்களமாம், புகார்களாம். பிரின்ஸிபால் கூப்பிட்டு கேட்டார். விஷயம் முழுவதையும் சொல்லி என் தகப்பனார் சம்மதத்தின் பேரிலும், உன் தமையனார் சம்மதத்தின் பேரிலும்தான் இருக்கிறோம் என்று சொன்னேன். ருஜு வேண்டும் என்றார். உன் தமையன் உனக்கு எழுதிய கடிதத்தை நாளைக்குக் காண்பிப்பதாகச் சொல்லி இருக்கிறேன்!' என்று சொல்லிக் கொண்டே சந்திரசேகரன் டீயை வாங்கிக் குடித்துவிட்டு 'லலிதா உட்கார் இப்படி,

எப்பொழுது பார்த்தாலும் ஏதாவது செய்துகொண்டிருந்தால் எப்படிப் பேசுவது?' என்று சிறிது சலிப்புடன் சொன்னான்.

அவன் குரலில் தொனித்த ஏக்கத்தைக் கேட்டவுடன், லலிதா சட்டென்று நாற்காலியில் உட்கார்ந்து விட்டாள்.

சிரித்துக்கொண்டே 'சரிபேசுங்கள் கேட்கிறேன்!' என்றாள்.

'கலியாணத்திற்கு ஊரில் பலத்த எதிர்ப்பு இருக்கும் போல் இருக் கிறது' என்று அப்பா எழுதியிருக்கிறார்'.

'இன்றா? இன்னும் என்ன விசேஷம், எல்லோரும் சௌக்கியம் தானே?' என்று லலிதா ஆவலுடன் கேட்டாள்.

'எல்லோரும் சௌக்கியம்தான். அம்மாதான் விடாப்பிடியாக...'

'இன்னுமா? சாமித்துரைபோய் சரிப்படுத்தி விடுகிறேனென்றானே?' என்று லலிதா கவலையுடன் கேட்டாள்.

'அம்மா சுபாவம் உனக்குத் தெரியாது, அவளுக்காகவும் தெரியாது, சொன்னாலும் கேட்கமாட்டாள். அழுவாள், ரகளை செய்வாள்!'

'எல்லாம் சரியாகப் போயிடும்; இதற்காகத்தானா பிரமாதமாக முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு...'

'இல்லை லலிதா, அதல்ல. நான் எந்த எதிர்ப்பையும் லட்சியம் செய்யவில்லை; அப்பா எதிர்ப்பையே தாங்கத் தயாராக இருந்தேனே. எதிர்ப்பு அதிகமாக அதிகமாகத் தான் ஸ்வாரஸ்யம்.'

'பின்?'

'இந்த வாழ்வு நரக வேதனையாக இருக்கிறது எனக்கு; உண்மை யைச் சொல்லுகிறேன், லலிதா; ஏன் தனிக்குடித்தனமாக வந்தோம் என்றிருக்கிறது'.

'ஏன்?'

'ஏனா? உனது சாமிப்பியம்தான்; நடுவில் அகற்ற முடியாத திரை போட்டதுபோல எவ்வளவுநாள்..'

'அதனாலா? நன்றாக இருக்கிறது! என்னவோ என்று பார்த்தேன். இந்தப் புருஷர்களே இப்படித்தான். எதையாவது பிரமாதப்படுத்தி பெண்களை நடுங்க வைத்து விடுவது-பயந்து போய்விட்டேன்!' என்று சொல்லிக் கொண்டே லலிதா எழுந்து அவனுடைய நாற்காலியின் கைமேல் உட்கார்ந்து கொண்டு வெட்கத்துடன் காதோடு காதாக 'இன்னும் ஒரு மாதம் தானே?' என்று முணுமுணுத்தாள்.

'அந்த ஒரு மாதந்தான் சகிக்க முடியாது போலிருக்கிறது; நீயோ நாளுக்கு நாள் செய்கிற துஷ்டத்தனமும்... தாங்கவில்லை!' என்று சந்திரசேகரன் திரும்பி அவள் தோளைப் பிடித்தான்.

'நான் என்ன செய்கிறேனாம்?'

'படித்தாலும் பெண் பெண்தான்; குணம் மாறுமா?'

'புருஷன் மட்டும்?'

'அதிருக்கட்டும்; பாரதி பாட்டு தெரியுமா உனக்கு?'

'எது?'

'மூத்தவர் சம்மதியில் வதுவை முறைகள் பின்பு செய்வோம் காத்திருப்பேனோடி...'

'காத்திருக்கத்தான் வேண்டும்!'

'துஷ்யந்தன் காத்திருந்தானா?'

'துஷ்யந்தனா? சகுந்தலை ஒன்றும் தெரியாத அசடு! திண்டாட வில்லையா பிறகு?'

'நீ திண்டாடமாட்டாய் நிச்சயம் -சாபம் கொடுக்கிறவர்கள் யாரும் இல்லை-காண்டேகர் கதாநாயகி ஸுலபா மாதிரி உன் வீட்டுக்காரர்கள் நிர்ப்பந்தம் செய்து...' என்று சந்திரசேகரன் முடிப்பதற்குள் லலிதா அவன் வாயைப் பொத்தினாள்.

'ஸுலபா ஒரு பெண்ணா? பிரபாகரனிடம் அப்படி ஈடு பட்டுவிட்டு, அவனையும் அப்படி நடந்துகொள்ள இடம் கொடுத்துவிட்டு பெரிய வர்கள் நிர்ப்பந்தத்திற்காக நிமிஷத்தில் கூசாமல் பிரிந்து போவதா? அவள் பிரபாகரனுக்கு எழுதின கடிதத்தின் தோரணையை ஒரு உணர்ச்சி யற்ற...' என்று லலிதா சொல்லி முடிப்பதற்குள் சந்திரசேகரன், 'ஸுலபாவை அவ்வளவு கடுமையாகத்தாக்காதே, லலிதா! பிரபாகரனை விட்டுப் போவது அவளுக்கு சுலபமாக இருந்திருக்குமா?' என்றான்.

'புருஷனுடன் அவ்வளவு நெருங்கிப் பழகும் தைரியம் கொண்ட பெண் கடைசியில்...' என்று சொல்லி லலிதா நிறுத்திக் கொண்டாள்; தானும் அந்த தைரியம் கொண்டவள் என்பது நினைவுக்கு வந்தது.

'சரி, பீச் பக்கம் போய்விட்டு வருவோமா?' என்றாள்.

'வேண்டாம், ஆன்டொனி சொன்னது ஞாபகமிருக்கிறதா? ரோம் டைபர் நதியில் முழுகட்டும்; சாம்ராஜ்யக் கட்டடம் தகரட்டும், என் இடம் இங்கேதான்! என்று கிளியோபாட்ராவின் மடியில் சாய்ந்தான். அதேபோல பீச்சை அலைகொண்டு போகட்டும்; மாலை நேரம் எக்கேடு கெட்டுப் போகட்டும்; எனக்கு...' என்று சந்திரசேகரன் லலிதாவின்மீது சாய்ந்தான்.

'என்ன இந்த மாதிரியெல்லாம் ஆரம்பித்து விட்டீர்கள்? மகா சாதுவான பிள்ளை என்று நினைத்தேனே?'

'எல்லாம் நீதான் காரணம்; சாதுக்கள் எல்லோரும் குணம் மாறிப் போவது உன்போன்ற துஷ்டத்தனம் கொண்ட பெண்களால்தான்?'

'எல்லாம் பெண்களால்தானாக்கும்?'

'சந்தேகமென்ன? ராமாயணத்துக்கு யார் காரணம்? அந்த அதிகப் பிரசங்கி சீதையால்தான்; இல்லியத் கதை நடந்தது எதனால்? ஹெலனால் தான்!'

'அப்புறம் அடுக்குங்கள்? எக்கேடு கெட்டுப் போகட்டும் என்று

விட்டுவிடுவது தானே!'

'அது தானே முடியவில்லை'.

'ராத்திரி சாதம் இருக்கிறது; புதிதாகக் கொஞ்சம் ரசம் வைக்கட்டுமா?'

'என்ன வேண்டுமானாலும் செய், போ! என்னை ஏன் கேட்கிறாய்? எல்லாம்தான் உன்னிஷ்டப்படி செய்வது என்று வைத்துக் கொண்டிருக்கிறாயே!' என்று சந்திரசேகரன் முதன் முதலாக மனஸ்தாபங்காட்டிப் பேசினான்.

லலிதா எழுந்து நின்றாள்; அவள் கண்களில் ஜலம் வந்துவிட்டது.

'என் இஷ்டப்படியா செய்கிறேன்? அப்படியா உங்கள் மனதில் பட்டுவிட்டது? சரி, உங்கள் இஷ்டப்படி நடக்கிறேன், வாருங்கள்!'

'லலிதா! என்ன கோபம் வந்து விட்டதா? என் மனதில் இருப்பதை சொல்லக்கூடாதா?'

'கோபமில்லையே! நீங்கள் சொல்வதிலும் பிசகில்லை; ஆனால், ஆனால், நீங்கள் இவ்வளவு மனஸ்தாபப்படுவதால் சொல்கிறேன்; படிப்பின் காரணமாக நான் துணிந்து உங்களுடன் இவ்வளவு தூரம் கலியாணம் என்று ஒன்றை எதிர்பாராமல் நெருங்கிவிட்டேன்; ஆனால் இந்த இடத்தில் என் படிப்பாலும் அகலாத சமஸ்காரம் என்னை உங்கள் இச்சையை – நம் இச்சையை – பூர்த்தி செய்யவிடாமல் தடுக்கிறது; அந்த சமஸ்காரம் கெடுதல் என்று நீங்கள் சொன்னால் நான் இணங்கி விடுகிறேன்; அந்த சமஸ்காரம் தானே நாம் மிருகங்கள் அல்ல என்பதற்கு அடையாளம்? ஆனால் உங்களுக்காக, நீங்கள் கட்டளையிட்டால் – அதையும் நான் உதறிவிடத் தயார்?'

சந்திரசேகரன் பிரமித்துப் போனான்; எழுந்து நின்று 'லலிதா? நீ என்னைக் காட்டிலும் எவ்வளவு பெரியவளடி!' என்றான்.

'இல்லவே இல்லை; நீங்கள் தான் உயரம்-வயதானவர்கள்! உங்கள் தோளுக்குத்தானே வருகிறேன்?' என்று லலிதா கண்ணீரிடையே சிரித்தாள்.

'மிருகத்தை-காட்டு மிருகத்தை அடக்குவதில் உன்னை மிஞ்ச முடியாது! சர்க்கஸ்காரன்கையில் துப்பாக்கியும் சாட்டையும் வைத்துக் கொண்டு மிருகத்தை அதிர வைக்கிறான், நீ...'

லலிதா தான் அடைந்த வெற்றி-இந்தக் கட்டற்ற எதிர்ப்பின்மேல் அடைந்த வெற்றி-மயக்கம் தர, துவண்டு சந்திரசேகரன்மேல் கண்களை மூடிக்கொண்டு சாய்ந்தாள்.

'லலிதா! லலிதா! என்னடி கண்ணு?' என்று சந்திரசேகரன் அக மகிழ்ச்சியில் உளறினான், அதிகப்படியாக.

லலிதா அரைக் கண்களைத் திறந்து புன்முறுவலுடன் 'இன்பம்!' என்று உதடுகளை அசைத்தாள்.

★★★

தஞ்சாவூர்

அன்புள்ள லலிதாவுக்கு,

நேற்று எனக்கு தகவல் ஒன்று கிடைத்தது முதல் துடிப்பு. நேரில் வருவதற்கு இல்லாமல் வேலைத் தொந்திரவு அதிகமாக இருக்கிற படியால் கடிதமாக எழுதுகிறேன்.

இனிமேல் ஒரு நிமிஷம்கூட சந்திரசேகரனுடன் சேர்ந்திருப்பது உசிதமல்ல, ஏனென்றால் நீ அவனை மணக்கப் போவதில்லை. அது நடக்காது என்ற தீர்மானத்திற்கு வந்துவிட்டேன்.

மணம் எதற்காக? நீ சுகப்படுவதற்காகத்தானே? அந்த சுகம் உனக்கு சந்திரசேகரனை மணந்து கொள்வதால் நிச்சயம் கிடைக்காது என்று எனக்குப் பட்டுவிட்டது. இவ்வளவு சிரமப்பட்டு அம்மாவையும் சித்தியையும் லட்சியம் செய்யாமல் உன்னை முன்னுக்குக் கொண்டு வந்து, 'கிளியை வளர்த்து பூனை வாயில் வைப்பது' என்பார்களே அதுபோல திருவெழுந்தூரார் கையில் கொடுக்கமாட்டேன். இதனால் நமக்கு எவ்வளவு அவமானம் நேர்ந்தாலும் சரி, பழி, பேச்சு வந்தாலும் சரி.

நேற்றுதான் எனக்கு தகவல் கிடைத்தது-உன்-அதாவது உனக்கு வரவிருந்த-மாமியார் மகா வாயாடியாம். வெகு துஷ்டையாம். ஆசாரம் என்ற சாக்கில் படாதபாடு படுத்துவாளாம். புருஷனை-கிழவனை -அதத்தில் அடக்கி வைத்திருக்கிறாளாம். பிள்ளைக்கு அம்மா பேச்சை மீற தைரியமில்லையாம். இந்த நிலைமையில் நீ சந்திரசேகரனைக் கலியாணம் செய்து கொண்டால் என்ன ஆகும்? வேறு நரகம் வேண்டுமா?

நல்ல வேளையாக இந்தத் தகவல் எனக்கு இப்பொழுது நம்பத்தகுந்த இடத்திலிருந்து கிடைத்திருக்கிறது. சித்திக்கு வேண்டிய பேர்-அதே ஊர்-யாரோ கனபாடிகள் -கதையாக வந்திருக்கிறது கடிதம்.

சந்திரசேகரன் தங்கை ஒருத்தியாமே. அவள் புக்ககமே போகிற தில்லையாம். தயார்க்காரி சும்மாயிருந்தாலும் தூண்டிவிடுவாளாம். தாயாரும் பெண்ணுமாகக் கூடிக் கூடி இப்பொழுதே பேசிக்கொள் கிறார்களாம்.

பிழைத்தோம்! இப்பொழுதாவது விவரம் தெரிந்ததே! போதும் சகவாசம். பார்த்தாயா, இதற்குத்தான் விசாரித்து எல்லாம் செய்ய வேண்டும் என்பது.

இந்தக் கடிதம் கண்டவுனேயே உன் பழைய இடத்துக்குப் போய் விடு. அவன் ஏதாவது தகறார் செய்தால் உடனே தந்தி அடி, நான் வருகிறேன். இல்லாததெல்லாம் சொல்லுவான்; ஒன்றையும் நம்பாதே. அவனுடன் இந்த விவரங்களைப் பற்றிய தர்க்கமும் வேண்டாம்.

என்னுடைய கடிதப்படி செய்வதாக சுருக்கமாகச் சொல்லிவிடு.

லலிதா, வாழ்க்கையில் எங்கெல்லாம் ஆபத்துக்கள் இருக்கின்றன, பார்! நாம் எதிர்பார்த்தோமா? சந்திரசேகரன் எவ்வளவு அழகாகப் பழகுகிறான். கிழவர் தங்மான மனுஷ்யராக காணப்பட்டாரே! ஆனால் அவர் என்ன செய்வார், பாவம்?

பணம் வேண்டுமா? உடனே ஜாகை மாற்றிவிட்டதற்கு எனக்குக் கடிதம் எழுது. அப்பொழுதுதான் எனக்கு வேலை ஓடும். மற்ற விஷயங்கள் பிறகு சாவகாசமாக எழுதுகிறேன்.

உன்,
ஆத்மநாதன்

★★★

திருவெழுந்தூர்

அன்புள்ள அண்ணாவுக்கும் மன்னிக்கும் நமஸ்காரம்.

உங்கள் இரண்டுபேர் பேரிலும் இப்பொழுது எனக்குக் கோபம் கோபமாக வருகிறது. எதிரே இருந்தால் இருவரையும் என்ன செய்வேன் தெரியுமா? ஒரு அறையில் தள்ளி நான்கு மணிநேரம் பூட்டி வைப்பேன்.

நீங்கள் ஏன் இன்னும் புறப்பட்டு வரமாட்டேன் என்கிறீர்கள்? பாழாய்ப்போன பரிட்சை இன்னுமா ஆகவில்லை? பொய்யும் புளுகும்! தாலி என்று ஒன்றைக் கட்டின பிறகு போங்களேன் எங்காவது.

அண்ணா, முகூர்த்தம் உடனே நடந்தாகவேண்டும். ஊரில் எல்லோரும் கட்சி கட்டுவதைப்பார்த்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. கலியாணம் நடக்கவொட்டாமல் செய்துவிடப்போகிறார்களாம். கனபாடிகள்தான் மும்முரமாக நிற்கிறார். 'நடக்கவிடுகிறேனா பார்' என்று நித்தியம் ஆற்றங்கரையில் ஆர்ப்பாட்டம் செய்கிறாராம். எனக்கென்னவோ பயமாக இருக்கிறது.

மன்னி, நீ தான் துரிதப்படுத்தணும். அண்ணா அப்படித்தான் இருப்பான். வெட்கப்பட மாட்டாயே? இரண்டு மாதமாவது சேர்ந் திருப்போம் என்றால் அப்போதென்னகந்தான் வருவீர்களா? கலியாணம் ஆனதும் நான் ஊருக்குப் போகணும். குழந்தை சௌக்யமாக இருக்கிறான்.

அப்பா அங்கே வந்திருந்தபோது நீ எப்படி உபசாரம் செய்தாய்? சதா உன் பேச்சுத்தான் போ! அப்பாவையும் அண்ணாவையும் இப்படி மயக்கிவிட்ட உன்னை ஒருதரம் கட்டிக்கவேண்டும்போல் இருக்கிறது.

'அவர்' நேற்று கடிதம் போட்டிருக்கிறார். உடனே புறப்பட்டு வரவேண்டுமாம்! அங்கே அடுப்பங்கரையில் அவிகிறதற்கு! என் மாமியாரை நினைத்துக் கொண்டால் தான் என் அம்மாவைப் பற்றியும், உன்னைப் பற்றியும் எனக்குப்பயமாக இருக்கிறது. நீயாவது சந்தோஷ

மாக இருப்பதைப் பார்த்தால் எனக்குத் திருப்தி. புருஷர்கள் என்ன செய்வார்கள் பாவம்!

என்னமோ எழுதுகிறேனே! பரிட்சை முடிந்த அன்று ராத்திரி வண்டியிலேயே புறப்பட்டு வாருங்கள். தேதியை எழுதுங்கள். சாமித்துரை ஸ்டேஷனுக்கு வண்டி கொண்டுவருவான்.

மன்னி, நீ உட்கார்ந்து கொண்டு வரப்போகிறாயாம் சாமித்துரை வண்டியை மராமத்து செய்வது புது வர்ணம் அடித்திருக்கிறான். மாடுகளுக்கு சலங்கை வாங்கிக் கட்டியிருக்கிறான். தான்தான் ஓட்டிக்கொண்டு வருவானாம். நீ வைத்த குழம்பு அவ்வளவு நன்றாக இருந்ததாம். தினம் சொல்லுகிறான். அவன் ஓங்கிப் பேசாவிட்டால் அம்மா அடங்க மாட்டாள். அவனால்தான் அம்மா இப்பொழுது கொஞ்சம் வாயை மூடிக்கொண்டிருக்கிறாள். ஊரிலும் யாராவது வாய் திறந்தால் கத்த ஆரம்பித்துவிடுகிறான். 'லச்சுமி வருது பாருங்க!' என்று சொல்லிக் கொண்டிருக்கிறான்.

உன் மருமான் என்ன பாடு படுத்துகிறான் என்கிறாய், ராத்தூக்கமே இல்லை. பகலெல்லாம் தூங்குகிறானா, ராத்திரி கெக்கலிபோட ஆரம்பித்து விடுகிறான். உன் தலையில் கட்டி விடப்போகிறேன் அவனை, அவ்வளவுதான். எனக்கு ரொம்ப பலஹீனமாக இருக்கிறது. உடம்பைப் பிழிந்து எடுத்தாற்போல் ஆகிவிட்டது. கவலைப்படாதீர்கள். உடம்பில் வியாதி ஒன்றும் இல்லை. நன்றாகத்தான் இருக்கிறேன். நீங்கள் வருகிறபோது போட்டோ எடுத்துக் கொண்டு வாருங்கள் மறக்காமல்.

உங்கள்
காமு

முற்றுப் பெறவில்லை (ப-ஆ)